# திருமணப் பாடல்கள்

(நாடோடிப் பாடல்கள்)



தொகுத்தவர்:
கி. வா. ஜகந்நாதன்

அமுத நிலையம் லிமிடெட்
46. இராயப்பேட்டை நெடுஞ்சாலை, 600 014

# முன்னுரை

உலகில் ஆணும் பெண்ணும் கணவன் மனைவியராகச் சேர்ந்து வாழ்வது இல்லறநெறி. திருமணம் ஆவதற்கு முன்னே ஒருவரை ஒருவர் காதலித்துப் பின்பு மணம் புரிவதும் உண்டு.

ஒருத்தியை மணந்தவன் வேறு பெண்ணிடம் உறவாடுவதும், ஒருத்தனை மணந்தவள் அயல் ஆடவனோடு உறவாடுவதும் உலகில் நடக்கின்றன.

மணம் புரிந்து கொண்டவர்களில் ஆடவன் மனைவியை ஏசுவதும், மனைவி ஆடவனை ஏசுவதும் சிலசமயங்களில் நேரும்

தீய ஒழுக்கம் உள்ள பெண்களும் ஆண்களும் உலகில் இருக்கத்தான் இருக்கிறார்கள். இது பலகாலமாக நிகழ்ந்து வருகிறது.

இந்தப் புத்தகத்தில் உள்ள பாடல்களில் ஆண், பெண் உறவில் எத்தனை வகை உண்டோ அவ்வளவையும் காணலாம்.

முறையாக திருமணத்தில் பெண்ணைப்பார்ப்பதும் பிறகு திருமணம் செய்வதும் நடைபெறுகின்றன. திருமணத்தின் போது பல நிகழ்ச்சிகள் உண்டு. நலுங்கிடுவது, ஊஞ்சல் ஆடுவது, நலங்கில் பத்தியம் பாடுவது, சம்பந்திகள் ஏசிக் கொள்வது முதலியவை திருமண நிகழ்ச்சிகள்.

இத்தகைய நிகழ்ச்சிகளையும் இத் தொகுதியில் உள்ள பாடல்களில் காணலாம்.

தலைப்பில் உள்ள கருத்தையன்றி வேறு கருத்துக்களும் இவற்றில் விரவி வரும்.

தமிழ் நாட்டில் வழங்கி வரும் நாட்டுப்பாடல்களில் வாழ்க்கையின் பல நிலைகளையும் காணலாம். நான் சென்ற இடங்களிலெல்லாம் கேட்டுத் தொகுத்தவை இவை. இவை பெரும்பாலும் பெண்கள் சொல்லக் கேட்டு எழுதிக் கொண்டவை.

பறவைகளின் திருமணம் பற்றியும் சில பாடல்களை இதில் காணலாம்.

இந்த வரிசையில் வேறு சில புத்தகங்களும் வெளிவரும். இறைவன் திருவருள் அந்த முயற்சியை நிறைவேற்ற வேண்டும்.

'காந்தமலை' — கி. வா ஜகந்நாதன்

சென்னை-28

# பறவை, விலங்குகளின் திருமணம்

## குருவியின் கல்யாணம்

1. ஜிகிஜிகிச்சாங் குருவி வந்து ஜிலாம் மாட்டிக்கிச்சாம்,
குருவி, ஜிலாம் மாட்டிக்கிச்சாம்,
ஜிலாம் மாட்டிக்கிச்சாம்,

2. அதிலே ஒரு டேக்குருவி அதுவும் மாட்டிக்கிச்சாம்-குருவி
அதுவும் மாட்டிக்கிச்சாம்.

3. வண்ணாத்திக் குருவி வந்து வலையில் மாட்டிக்கிச்சாம்,
குருவி-வலையில் மாட்டிக்கிச்சாம்.

4. செங்கால நாரை வந்து சேவகம் பண்ணிக்கிச்சாம்;
நாரை-சேவகம் பண்ணிக்கிச்சாம்.

5. பார்க்கப் போன கம்பளிப் பூச்சி.
பல்லை இளிச்சதாம்-பூச்சி
பல்லை இளிச்சதாம்,

6. மஞ்சப் பூசிக்கிச் சாம்குருவி மாலை போட்டுக்கிச்சாம்;
-குருவி, மாலைபோட்டுக் கிச்சாம்.

7. பொட்டிட்டுக்கிச்சாம் குருவி, மையிட்டுக்கிச்சாம்-குருவி
மையிட்டுக்கிச்சாம்-குருவி
நத்து இட்டுக்கிச்சாம்.

8. பந்தல் போட்டுக்கிச்சாம் குருவி
மோளம் அடிச்சிக்கிச்சாம் -குருவி
மோளம் அடிச்சிக்கிச்சாம்.

9. தாலி கட்டிக்கிச்சாங் குருவி;
கண்ணாலம் பண்ணிக்கிச்சாம்.
டும் டும் டும் குருவி
கண்ணாலம் பண்ணிக்கிச்சாம்.

10. கன்னிக் காக்காய் ஓடி வந்து
காலை நீட்டிக் கிச்சாம்-காக்காய்
காலை நீட்டிக் கிச்சாம்.

## காக்கை கல்யாணம்

காக்கைக்கும் காக்கைக்கும் கல்யாணம்.
கறுத்த பொட்டியில் மஞ்சளாம்.
அள்ளித் தெளி சந்தனம்.
அழகு போல மாப்பிள்ளை
கொட்டுக் காரன் சப்பட்டை.
குதிரைக் காரன் ராவுத்தன்.
எங்கள் மச்சான் பேயாண்டி.
எல்லோரும் வந்து பாருங்கள்.
தெப்பக் குளத்தில் நீராடித்
தேரடி முட்டியிலே பூசைபோடு.

## காக்காய்க் குஞ்சின் கல்யாணம்

காக்காக் குஞ்சுக்குக் கல்யாணம்.
காசுக்கு ரெண்டு ஒட்டுமஞ்சள்.
தொட்டுக் குளிச்சாச் சிவந்திருக்கும்.
துரையைக் கண்டால் மணமணக்கும்.
மாங்குளத் துக்குப் போனாள்.
மயில் ஆடக் கண்டாள்.
அள்ளும் புல்லும் சந்தனம்.
அழகு மாலை தோரணம்
கொம்பு ரெண்டும் தம்பட்டம்.

குதிரை மேலே ராவுத்தன்.
வாழைத் தண்டை ரெண்டா வெட்டி
வடமலை யப்பனைப் பொண்ணு வெச்சு
தேர் மேலே ஏத்தி வெச்சு
வேடிக்கை பார்ப்பார் யார்?

[பாடும் குழந்தையின் பெயரைச் சொல்லிப் பாட்டை முடிப்பது.]

## காக்கை கல்யாணம்-1

காக்காக் குஞ்சுக்குக் கல்யாணம்
காவடி ஒட்டம் தேரோட்டம்
நாலு கரண்டி மண்ணெண்ணெய்
நாற்பத் தெட்டுத் தீவாளி
வாரூர் வாரூர் சுப்பையா,
வழியை விலத்தடி மீனாட்சி!

## காக்கை கல்யாணம்-2

காக்காய்க் குஞ்சுக்குக் கல்யாணம்.
தொட்டுக் குடுத்தால் குலுக்கணும்.
துரையைக் கண்டால் மறுக்கணும்.
வீட்டை வீட்டை மொழுகணும்.
வெள்ளிப் பாயைப் போடணும்.
பன்னீரு சந்தனத்தைக் கிட்டக்கிட்ட வை.
மாறக்குடி வெத்தலையை மடிச்சுமடிச்சு வை.

## பொரியரிசியின் கதை

[ஒவ்வொருவராக எதிர்ப்படும்போது வாழ்க்கைப்பட மறுத்த பொரியரிசி. கோழியின் வாயில் புகும்போது சொல்லிப் புலம்புவது.]

ஆனை மடக்குச்செவி என்றேனே, என்றேனே!
குதிரை குந்தம் தள்ளி என்றேனே, என்றேனே!

ஒட்டகம் ஒருகோணலோ என்றேனே, என்றேனே!
கழுதை கரல்எறிவாய் என்றேனே, என்றேனே!
குருவி சிட்டுக்குருவி என்றேனே, என்றேனே!
கோழிக்கு வாழ்க்கைப்பட்டு உயிரைக் குடுந்தேனே!

# மிருகங்கள் கல்யாணம்

(அபிநயப் பாட்டு)

மஞ்சள் வெயில் காயுதாம்;
    மழையும் கொஞ்சம் பேயுதாம்;
கொடி இடி வாத்தியம்
    குமுகு மென்று முழங்குதாம்;
கங்கணம் கணகண எனக்
    கிங்கிணி கிணி கிணி எனத்
தாரை கொம்பு தப்பட்டை
    வீர முரசு தமுக்குடன்
காட்டில் உள்ள மிருகங்கள்
    கலியாணம் செய்யுதாம்;
சிங்க ராஜா மகனுக்குத்
    தங்க வாணி மணிவியாம்;
ஹாட்டு பூட்ஸு* கோட்டுடன்
    காட்டுக் குரங்கு ஆடுதாம்.
கரடியானை புலியுடன்;
  பலரெல்லாம் போகுலாம்.

## பச்சைத் தவளை

பச்சைத் தவக்களை, பச்சைத் தவக்களை
    எத்தனை நெல்லுக்கு ஆசைப்பட்டே?

---

*(பாடம்) ஷர்ட்டுப் போட்டுடன்.

ஓரேநெல்லுக்கு ஆசைப்பட்டேன்.
ஒருநெல்லைக் குத்தி எடுக்கச்
சின்ன உலக்கை வேணுமே!
சின்ன உலக்கைக்குப் பூணு கட்டத்
தச்சப் பையன் வேணுமே!
தச்சப் பையன் குடியிருக்கக்
குச்சு வீடு வேணுமே!
குச்சு வீட்டுக் கூரை மேயக்
கொத்தன் ஒத்தன் வேணுமே!
கொத்தனுக்குக் கறியாக்கக்
குச்சு மீனு வேணுமே!
குச்சு மீனுக் கிரையாகப்
பச்சைத் தவளை வேணுமே.

## தவளையின் குடும்பம்

பச்சைத் தவக்களை, பச்சைத் தவக்களை,
எத்தனை நெல்லுக்கு வாழ்க்கைப் பட்டே?
கோட்டை நெல்லுக்கு வாழ்க்கைப் பட்டேன்.
கோட்டை நெல்லிலே முத்திரை போடக்
கணக்குப் புள்ளை வேணுமே!
கணக்குப் புள்ளையைத் தட்டி எழுப்பக்
கைக்குழந்தை வேணுமே!
கைக்குழந்தைக்குப் பால் கொடுக்கக்
குறத்தி ஒருத்தி வேணுமே!
குறத்திக்குப் பேன் பார்க்கக்
குரங்குக் குட்டி வேணுமே!
குரங்குக் குட்டிக்கு வாலறுக்கச்
சூரிக் கத்தி வேணுமே!
சூரிக் கத்தியைச் சொருகி வைக்கப்
பொத்தக் குடிசில் வேணுமே!
பொத்தக் குடிசிலைப் பிரிச்சுக் கட்டப
போத்த ராசா வேணுமே!

## தவளையின் இல்வாழ்க்கை

பச்சைத் தவக்களை, பச்சைத் தவக்களை,
எத்தினியா நெல்லுக்கு வாழ்க்கைப் பட்டே?
ஒரே நெல்லுக் குத்தி எடுக்க
இடைச்சிறுக்கியைக் காணோமே'!
ஒரேநெல்லுக் குத்தி எடுத்து
ஒன்பது பேருக்கு ஆக்கிப் போட்டேன்.

## சுண்டெலி ராஜன் கல்யாணம்

சுண்டெலி ராஜனுக்குக் கல்யாணமாம்;
சோளத்தட்டைப் பல்லாக்கில் ஊர்கோலமாம்;
ஒருஒலி ஓடிப்போய் ஊருக் கெல்லாம் சொன்னதாம்;
ரெண்டெலி சேர்ந்துகொண்டு ரத்னக்கம்பளம்
    விரிச்சதாம்;
மூணெலி சேர்ந்துகொண்டு முகூர்த்தக்கால் நட்டதாம்;
நான்கெலி சேர்ந்துகொண்டு நாகசுரம் வாசிச்சதாம்;
அஞ்செலி சேர்ந்துகொண்டு பஞ்சாங்கம் பார்த்தாம்;*
ஆறெலி சேர்ந்துகொண்டு கூறை உடுத்திச்சாம்;
ஏழெலி சேர்ந்துகொண்டு தாழம்பூக் சூட்டினதாம்;
எட்டெலி சேர்ந்துகொண்டு கொட்டகை ஜோடிச்சுதாம்;
ஒன்பதெலி சேர்ந்துகொண்டு உல்லாசமாய்ப்
    பாடிச்சாம்;
பத்தெலி சேர்ந்துகொண்டு பல்லாக்குத் தூக்கிச்சாம்;
சுண்டெலி ராஜன் கலியாணத்துக்கு வந்தவர்களுக்கு
சத்திரத்திலே சாப்பாடு; வெத்தலை பாக்குக் கடையிலே;
சந்தனம் குங்குமம் கோவிலிலே.

## ஓணான் கதை

[ஓணானுக்கு நாலு மனைவி; காக்கை, கொக்கு, வண்டு, நண்டு. மாசம் ஒருத்தியாக முறைவைத்து வாழ்ந்தன, நண்டு பிள்ளை உண்டாகிச் சமுத்திரக் கரையில் உள்ள

*(பா-ம்) மஞ்சள் அரைச்சதாம்,

பிறந்த வீட்டிற்குப் போயிற்று. ஒரு பிள்ளைக் குழந்தை பிறந்தது. வண்டு ஏழாம்நாள் சாப்பிடப் போயிற்று. நண்டு அவமானம் செய்து அனுப்பி விட்டது. வண்டு வந்து சக்களத்தியிடம் சொல்கிறது.]

ஆக்கிப் பொரிச்சு அடுக்கிட்டு மூடிப்
பொன் தூணிலே சாஞ்சிருந்தேன்;
பொன்நங்கை புள்ளெ பெத்தாள்,
என்றுசொன்னான் சிறு வண்ணான்.*
கால்பணத்துக்குக் கைக்கட்டுக் காப்பு,
அரைப்பணத்துக்கு அரைவடம் சங்கிலி,
முக்கால் பணத்துக்கு மோதிரம் நெளிவு;
கட்டெறும்பின் தலையிலே காப்பரிசிக்கு அரிசி,
தேனெறும்பின் தலையிலே தேங்காயும் சக்கரையும்;
ஈர்க்குக் குழலிலே இருநாழி எண்ணெயும் கொண்டு
போனேன்,
சக்களத்தி வாஎன்று சொல்லவில்லை;
நானாக, நண்டே, பெருங்காலி, தம்பி பொறந்தானா?
சும்மா இருக்கானா? அழுது கெடக்கறானா?
குழிதோண்டும் கையாலே பால்தாங்கிக் குடிக்கறானா?
என்று கேட்டேன். அவள் சொன்னது:
தும்பி, தும்பி, மரத்தைத் துளைப்பாய்;
காட்டில் வாழும் கள்ளன் தங்காய்,
கொண்டாந்து எல்லாம் வச்சுவிட்டு,
முறம்கெடக்குது, மொழுகிவிட்டு,
முத்தம் கெடக்குது, தூத்துவிட்டு,
கலம் கெடக்குது, தேச்சுவிட்டு,
கலம் சாமை கெடக்குது, குத்திவிட்டு,
வாசலாலே வந்தால் கொல்லையாலே போ;
கொல்லையாலே வந்தால் வாசலாலே போ;

---

*வண்ணான் பிள்ளைப் பேற்றை அறிவிப்பது வழக்கம்.

காக்கை சொன்னது:
அவள், சொல்லுவள், சொல்லுவள், பொன்நங்கை;
அவள், சொல்லாள் என்று எண்ணவும் வேண்டாம்,
காக்கையின் காலுக்குக் கட்டுவடமும் பீலியும்
எதற்கு என்று கேட்டவள் அல்லவோ?
அவள், சொல்லுவள், சொல்லுவள், பொன்நங்கை.
கொக்கு சொன்னது:
கொக்கின் கழுத்துக்குத் தட்டுக் காறை
எதற்கு என்று கேட்டவள் அல்லவோ?
அவள், சொல்லுவள், சொல்லுவள், பொன்நங்கை.
கேட்ட ஓணன் சொன்னது:
அவள், சொல்லுவள், சொல்லுவள், பொன்நங்கை;
அவள், சொல்லாள் என்று எண்ணவும் வேண்டாம்;
நான், பச்சைப் பல்லாக்கின் மேலே ஏறிப்
பார்வேட்டைக்குப் போகும் போது
ஒந்தி, ஒருகுடம் தண்ணி கொண்டுவா,
என்று சொன்னவளே அவள்;
ஓணன் தலைக்குச் சந்திர காவித் தலைப்பாகை,
எதற்கென்று கேட்டவளே அவள்;
அவள், சொல்லுவள், சொல்லுவள், பொன்நங்கை.

# ஆடவர் கூற்று

## திருட்டுப் பார்வை

ஆத்தருகே - ஏலேலோ - வங்களாவாம்,
அடுக்கடுக்காய் - ஏலேலோ - பூஞ்செடியாம்,
பூஞ்செடியை - ஏலேலோ - மறைவு வச்சுப்
புண்ணியரோ - ஏலேலோ - பார்க்கிறது?

## துண்டு துணுக்குகள்

ஜிட்டான் ஜிட்டான் குருவி ஜிணுக்கிச்சான் - அந்த
ஜீவரத்னப் பொண்ணுமேலே கணக்குத்தான்.



பாட்டி, பதக்கரிசி தீட்டி, கோணக் காலை நீட்டி,
குசுவிடடி பாட்டி.



அயித்தேக்கு நாத்தினுக்கு மச்சினியா ஓரகத்தி,
அண்ணே இலே
ஓமா இந்தக் கோமான் மவனே
ஏமா கொண்ணே? போமா போமா.

## பெண் கேட்ட கதை

[தங்கச்சி அண்ணனைப் பெண் கேட்கப் போனாள்,]

**தங்கை:** பொண்ணுக்குத்தான் அண்ணுவே,
நானுவந்தேன்;
பெலங்குறைய அண்ணுவே, பேசாதீங்க;
மகளுக்கேதான் அண்ணுவே, நானு வந்தேன்;
மனம்குறைய அண்ணுவே, பேசா தீங்க;

**அண்ணன்:** என்ன என்ன தங்கச்சிநீ கனவுகண்டே?
என்மவளேத் தங்கச்சிநீ கேட்க வந்தே.

**தங்கை:** திட்டியிலே அண்ணுவே, இருக்கும் அந்தத்
தென்னமரம் அண்ணுவே நான், சாயக்
கண்டேன்;
வாசலிலே அண்ணுவே, இருக்கும் அந்த
வாழைமரம் அண்ணுவே நான் சாயக்
கண்டேன்.

**அண்ணன்:** பெண்ணு போயி, தங்கச்சி, எட்டு நாளு;
பேட்டையிலே, தங்கச்சி, ஒண்ணும் இல்லே;
மகளு போயி,தங்கச்சி, எட்டு நாளு,
மாளிகையிலே, தங்கச்சி, ஒண்ணும் இல்லே.

**தங்கை:** சேருநல்ல அண்ணுவே, உன், பணமும் சரி;
சேரிடியே, அண்ணுவே, என் கல்லும் சரி,
போருநல்ல அண்ணுவே, உன்பணமும் சரி,
போரடியே அண்ணுவே, என் கல்லும் சரி.

## பெண் ஆசை

பெட்டி வேண்டாம், பேழை வேண்டாம் - சின்னமாமி
- உன்தன் பெண்டுகளேத் தந்திடணே, சின்னமாமி,
தாலி வேண்டாம், கூறை வேண்டாம்-சின்னமாமி-உன்றன்
தையலரைத் தந்திடணே, சின்னமாமி.
[யாழ்ப்பாணத்தில் வழங்குவது.]

## பெண்கேட்டல்

[முதலில் எண்ணெய் வார்க்கும்படி கேட்பது.]
கிளிகளெல்லாம் போனேண்டி அக்கா;
கிளியோடே கிளிவந்து சேந்தேண்டி அக்கா;
மாயக் குறவனுக்குப் பூந்தேண்டி அக்கா;
வாயில்லாப் பூச்சியைப் பெத்தேண்டி அக்கா;

காப்பிரிக்கா மட்டைவெட்டித் தலைகாஞ்சு போச்சு;
கொஞ்சம் எண்ணெய் வாரு;கொஞ்சம் எண்ணெய்வாரு.
[பத்துத் தடவை சொல்லவேண்டும்.]

[பிள்ளை வீட்டார் பெண் வீட்டில் எண்ணெய் கேட்பார்கள்.]

இப்பத்தான் கழனிக்கு எடுத்துப் போயிருக்குது;
இப்பத்தான் எள்ளு விதைச்சிருக்குது;
இப்பத்தான் ரெண்டெலை விட்டிருக்குது;
இப்பத்தான் அரும்பு கட்டியிருக்குது;
இப்பத்தான் பூவுப் பூத்திருக்குது;
இப்பத்தான் காய் காச்சிருக்குது;
இப்பத்தான் களத்திலே போட்டிருக்குது;
இப்பத்தான் செக்காடி வந்திருக்குது;
இனியேனும் கொஞ்சம் எண்ணெய் விடு.
நடு வீட்டில் வச்சுத்தான் தாரணும்;
கற்பூரம் கொளுத்தித்தான் தாரணும்.

[பிறகு கொஞ்சம் எண்ணெய் கொடுக்கத் தேய்த்துக் கொள்வார்கள். பிறகு பெண் கேட்பார்கள்.]

ஒத்தச் செருப்பாலே வந்தோம் நாங்க;
ஓரடி வில்லாலே வந்தோம் நாங்க;
மாஞ்சுருளாலே வந்தோம் நாங்க;
மல்லிப்பூச் செண்டாலே வந்தோம் நாங்க;
பேரிட்ட மாமியார் வந்தோம் நாங்க;
பெண்ணுக்கு நாத்தனார் வந்தோம் நாங்க;
பொண்ணுக்குடு தங்கப், பொண்ணுக்குடு;
பொண் இல்லே; தங்கம் பொண் இல்லை;
ரெட்டைச் செருப்பாலே வந்தோம் நாங்க;
பொண் இல்லை தங்கம் பொண் இல்லை;
மூணு செருப்பாலே வந்தோம் நாங்க;
பொண் இல்லை, தங்கம் பொண் இல்லை.

(இப்படியே தொடர்ந்து வரும். விளையாட்டுக் கல்யாணத்தில் கல்யாணத்துக்கு முன்னே இதைப்பாடுவார்கள்.]

## பெண் கொடு

நீ பொண் கொடேன், நீ பொண் கொடு;
இஞ்சி பிஞ்சிக்குப் பொண் கொடு;- சிறு
எலுமிச்சங் காய்க்கும் பொண் கொடு;
நாரத்தங் காய்க்கும் பொண் கொடு;
நாலு மொளகுக்கும் பொண் கொடு;
மூணு மொளகுக்கும் பொண் கொடு;
தாலி கூலி பொண் கொடு - ஒரு
தாமரை இலைக்கும் பொண் கொடு,
சித்தா மூருக் குள்ளே நீ
சேரச் சேரப் பொண் கொடு;
சீ பொண் இல்லை, சீ பொண் இல்லை!

## கல்யாணப் பெண்

சின்னச் சின்ன எந்திரமாம்,
 திருஎவ்வுளூர்க் கோபுரமாம்;
எங்களுடை அத்தை மகன்
 என்னைக் கொள்ள மாட்டேன் என்ருன்;
மந்தையிலே மாடிருக்க
 மதுரைப் பெண்கள் நாம்இருக்கக்
கொண்டையிலே பூவிருக்கக்
 குத்தம் என்ன ராஜாவே?

## கூந்தல் அழகி

ஆத்திலே தலைமுழுகி ஆவாரப் பூப் பட்டுடுத்தித்
தூத்துகிருள் தலைமயிரைத் துரைமக்கள் கையெடுக்க.

## கொண்டை

ஆத்தாடி இந்தக் கொண்டை
ஆரைக் குடிகெடுக்க?

## துண்டு துணுக்குகள்

மொட்டைத் தலைக்கொரு பட்டுக் குல்லாய்,
முளிக்கா துக்கொரு தென்னோலை;
ஆட்டுக் குட்டிக்குக் கல்யாணம்;
அழைத்து வாடி மொட்டையக்கா!
கல்லுத் தூக்கி மேலே போட்டாச்
செட்டியார் வீட்டு நண்டு.
எங்க மாடு எளைச்சுப் போச்சு,
கொல்லப் போறேன், தொல்லைப் பையா!

## மானம் குலைப்பவள்

1. தலையைப் பாரு தலையழகை,
மன்னவரே கொற்றவரே - தில்லாலே சாமி
தலைக்கு வச்சுக்க ராக்கொடி இல்லையடா,
முண்டாசுக் காரா!
வாங்கின ராக்கொடி பொட்டியில் இருக்கடி,
பொண்டாட்டி நாயே-அடி-வைப்பாட்டித் தாயே,
சபையில் வந்து மானம் குலைக்கிறாய்
மொட்டைத்தலை நாயே!

2. மூக்கைப் பாரு மூக்கழகை
மன்னவரே, கொற்றவரே. தில்லாலே சாமி,
மூக்குக்குப் போட மூக்குத்தி இல்லடா
முண்டாசுக் காரா!
வாங்கின மூக்குத்தி பொட்டியில் இருக்கடி
பொண்டாட்டி நாயே-அடி-வைப்பாட்டித் தாயே,
சபையில் வந்து மானம் குலைக்கிறாய்,
மூக்கறுந்த நாயே!

3. கண்ணைப் பாரு கண் அழகை,
மன்னவரே கொற்றவரே, தில்லாலே சாமி,

கண்ணுக்கு வச்சுக்க மையில் லேடா
முண்டாசுக் காரா;
வாங்கின மைக்கூண்டு பொட்டியில் இருக்கடி
பொண்டாட்டி நாயே-அடி - பொட்டைக் கண்ணு
நாயே!

4. காதைப் பாரு காதழகை
மன்னவரே, கொற்றவரே, தில்லாலே சாமி,
காதுக்குப் போடக் கம்மல் இல்லேடா
முண்டாசுக் காரா.
வாங்கின கம்மல் பொட்டியில் இருக்கடி
பொண்டாட்டி நாயே-அடி-காதறுந்த நாயே.
சபையில் வந்து மானம் குலேக்கிருய்,
காதறுந்த நாயே!

5. கழுத்தைப்பாரு, கழுத்தழகை
மன்னவரே, கொற்றவரே, தில்லாலே சாமி,
கழுத்துக்குப் போடக் காறை யில்லேடா
முண்டாசுக் காரா!
வாங்கின காறை பொட்டியில் இருக்குது
பொண்டாட்டி நாயே -அடி-வெறுங்கழுத்து நாயே.
சபையில் வந்து மானம் குலேக்கிருய்,
வெறுங் கழுத்து நாயே!

6. மாரைப் பாரு மாரழகை,
மன்னவரே, கொற்றவரே, தில்லாலே சாமி,
மாருக்குப் போட ரவிக்கை இல்லையடா
முண்டாசுக் காரா!
வாங்கின ரவிக்கை பொட்டியில் இருக்குது,
பொண்டாட்டி நாயே, அடி, வைப்பாட்டித் தாயே!
சபையில் வந்து மானம் குலேக்கிருய்,
ஒண்ணு மில்லாத நாயே!

7. கையைப் பாரு கையழகை,
மன்னவரே, கொற்றவரே, தில்லாலே சாமி,
கைக்குப் போட வளையல் இல்லேடா,
முண்டாசுக் காரா!
வாங்கின வளையல் பொட்டியில் இருக்குது
பொண்டாட்டி நாயே - அடி - வைப்பாட்டித்
தாயே!
சபையில் வந்து மானம் குலைக்கிறாய்,
கையொடிஞ்ச நாயே!

8. இடுப்பைப் பாரு, இடுப்பழகை,
மன்னவரே, கொற்றவரே, தில்லாலே சாமி,
வாங்கின ஒட்டியாணம் பொட்டியில் இருக்குது,
பொண்டாட்டி நாயே - அடி-வைப்பாட்டித் தாயே,
சபையில் வந்து மானம் குலைக்கிறாய்,
இடுப்பொடிஞ்ச நாயே!

9. காலைப்பாரு, காலழகை,
மன்னவரே, கொற்றவரே, தில்லாலே சாமி.
காலுக்குப் போடத் தண்டையில் லேடா
முண்டாசுக் காரா!
வாங்கின தண்டை பொட்டியில் இருக்குது,
பொண்டாட்டி நாயே - அடி-வைப்பாட்டித் தாயே,
சபையில் வந்து மானம் குலைக்கிறாய்,
காலொடிஞ்ச நாயே!

## காதை அறுத்தவன்

நான் பெத்த மகளே, நான் பெத்த செல்வமே,
ஆரடி அறுத்தது அருமையான காதை?
அவன்தாண்டி அம்மா, மலைநாட்டுக் குறவன்
தக்கை இல்லாமலே அறுத்தாண்டி காதை.

## கிழவனுக்கு வாழ்க்கைப்பட்டவள்

தக்காளித் தக்காளித் தையல்முத்தே,
கிழவனுக் கேண்டி வாழ்க்கைப் பட்டே?
முள்இல் லாத காட்டிலே
முருங்கைக் கீரை பறிக்கப் போனேன்.
பல்இல் லாத கிழவன் வந்து
பரிசம் போட்டான் தக்காளி!

## கலியாணம்

பொதை பொதைப்பாளாம் - சின்னுச்சி
பொட்டு இடுவாளாம் - சின்னுச்சி
வரகரைப் பாளாம் - சின்னுச்சி
வட்ட மிடுவாளாம் - சின்னுச்சி
மூணும் புறைக்கு - மூத்தாருக்குக் கலியாணம்,
நாலாம் புறைக்கு - நாத்தனுருக்குக் கலியாணம்,
அஞ்சாம் புறைக்கு - அல்லாருக்கும் கலியாணம்.

## கண்டால் வரச்சொல்

காலேக் கடம்பரா, மத்தியான்னச் சொக்கரா,
மாங்காய் பழுத்திருக்கும் மணத்தட்டை வீதி,
பொரி பொரிக்கும் பொய்யப்புத்தூர்,
போக்கணம் கெட்ட கிருஷ்ணுபுரம்,
ரெட்டை வாய்க்கால் பாலமாம்,
அஞ்சாறு கோயிலாம்;
அதில் ஒரு குடிசையாம்;
வீதியிலே டொம்பப்புள்ளே,
சமுத்திரத்திலே வாரகுலம்,
கண்டா வரச் சொல்லுங்க;
கையெழுத்து நான்போடுறேன்.

## பெண்ணை அனுப்பு

பொழுதும் போச்சத்தே, பொண்ணை அனுப்பத்தே,
எண்ணெய் இல்லை; சீக்காய் இல்லை; இளந்தேங்காய் மஞ்சள் இல்லை;
வாழைப்பூச் சீலை இல்லை, வரமாட்டாள் என்மகள்.

## சக்களத்தி சண்டை

சக்களத்திக்கும் சக்களத்திக்கும்
சண்டை என்னடி - இந்தச்
சாதிகெட்ட மாமனுக்குக்
கொண்டை என்னடி?

## வாங்கள் சம்பந்தி

மஜிலின் பாவாடை கட்டிக்கொண்டு
மத்தாப்பு ரவிக்கை போட்டுக்கொண்டு
காடி வண்டியில் ஏறிக்கொண்டு
கன்செட்டு வாத்தியம் வச்சுக்கொண்டு
வாங்கள் அம்மா சம்பந்தி
வாங்கள் அம்மா சம்பந்தி.

## புருஷனுக்கு வரவேற்பு

ஏகுட்டி வீராயி, உன்புருசன் வாராண்டி;
வீட்டைக் கூட்டி மெழுகடி, வெள்ளிப் பாயைப் போடடி;
கிள்ளி முள்ளிச் சந்தனத்தைக் கிட்ட எடுத்து வையடி;
மதுரைக் கோட்டை வெற்றிலை* மடிச்சுமடிச்சு வையடி;
ஒழுக ஒழுகச் சந்தனத்தை மார்நிறையப் பூசடி.

---

*மாடக்குளி வெற்றிலை.

**அவள் பதில்:** பச்சைநெல்லும் கிச்சை நெல்லும் குத்து
வான்னு இருக்கறே?
பதினெட்டுப் பணியாரம் சுடுவான்னு இருக்கறே?
கொட்டாங்கச்சி மாப்பிள்ளையை அழைப்பான்னு
இருக்கறே?
ஒழுக ஒழுகச் சந்தனத்தைப் பூசுவான்னு இருக்கறே?
பாக்கு மரத்திலே பாக்கில்லே;
பண்டாரத் தோப்பிலே பூவும்இல்லே;
நேத்தறுத்த சாவலுக்கு ரத்தமும் இல்லே;-இந்த
வாழ்வுகெட்ட மகனுக்கு வெக்கமும் இல்லே.

## மருமகள் கூற்று

ஆடினாள் கூத்து; அடிச்சாள் நடலத்தை;
ஏறினாள் தேர்மேலே எல்லாரும் பார்த்திருக்க.

## கல்யாணப் பேச்சு

[சிறுவர் சிறுமியர் கல்யாண மென்று வைத்து விளையாடும் போது, பிள்ளைகள் இரண்டு வரிசையாய் நின்று கொண்டு ஒரு வரிசைக்கு மாப்பிள்ளை வீடு என்றும், மற்றொன்றுக்குப் பெண்வீடு என்றும் பெயர் வைத்து, பிள்ளை வீட்டார் பெண்பார்க்க வரும்போது இருசாராருக்கும் இடையே நடக்கும் பேச்சு.]

**பிள்ளைவீட்டார்:** ஒருகழஞ்சுப் பூவும் தாரேன்,
ஒரு கழஞ்சுப் பொன்னும் தாரேன்,
பொண்ணும உண்டோ? பூவும் உண்டோ?

**பெண்வீட்டார்:** போய் வாரேன், சம்பந்தமே.
ஒருகழஞ்சுப் பொன்னைக் கொண்டு
ஆத்துவேனோ? தூத்துவேனோ?

ஆறு கடலாய்க் காய்ச்சு வேணோ?
சின்னண்ணன் காலுக்குச் செருப்படிக்கக் காணுது;
பெரியண்ணன் காலுக்குப் பிரம்படிக்கக் காணுது;
கொல்லையிலே மேஞ்சுவரும் கோழிக்கே காணுது;
மந்தையிலே மேஞ்சுவரும் மாட்டுக்கே காணுது;
சம்பந்தமே!

[இவ்வாறு பத்துத் தரம் கேட்டதும் பெண்வீட்டார் பெண்கொடுப்பதாக வாக்குக் கொடுக்க வேண்டும். பிறகு நகை என்ன போடவேண்டும் என்று கேட்பார்கள். அதற்கு அவர்கள் பதில் சொல்வார்கள்.]

## பெண் கொள்ள

கண்ணுக் கழகாலே கொள்ள வேணும்;
காரியக் கொப்பாலே கொள்ள வேணும்;
பொண்ணுக் கழகாலே கொள்ள வேணும்;
பொறந்தாத்துச் சீராலே கொள்ள வேணும்.

## முத்து வீராயிபாட்டு

ஓரான் ஓரான் தோட்டத்திலே - பிள்ளாய்
ஒருத்தன் போட்டது வெள்ளரிக்காய்;
காசுக்கு ரெண்டு விற்கச் சொல்லி
காயிதம்[1] போட்டான் வெள்ளைக்காரன்;
வெள்ளைக்காரன் பணம் வெள்ளிப்[2] பணம்;
வெள்ளிப்பணமது சின்னப் பணம்;
வெள்ளிப்[2] பணத்துக்கு ஆசைப்பட்டுப்-பிள்ளாய்
வேஷங் குலைந்தாளே வீராயி[3];
ஒருவருஷமாய் ஒண்ணரை மாசமாய்
எண்ணெயும் தேச்சு முழுகாமல்

---

(பா-ம் 1. கடிதாசு. 2. சின்னப்பணத்துக்கு. 3. உன்னையும் காணாமல்.

சடைவளர்த்ததும் சந்நாசி ஆனதும்
சம்மத மோமுத்து வீராயி?

## முத்து வீராயி பாட்டு - தொடர்ச்சி

தென்ன மரத்திலே பானேகட்டி - நல்ல
தெய்வ லோகத்திலே கள்ளிறக்கி
கள்ளுக்குடிக்கப் போன இடத்திலே
*உன்னேக்கண்டேனடி வீராயி
கூந்தல் பெருத்தது கும்பகோணம் - பிள்ளாய்
கொண்டை போட்டது தஞ்சாவூரு
வாரி முடித்தது செவ்வாய்ப் பேட்டை - அவள்
வாழ்வு செழித்தது அம்மாப் பேட்டை.

## முத்து வீராயி

தென்ன மரத்துச் சோலேக்குள்ளே ரெண்டு
தேரை இருந்து முழிக்குதுபார்;
தென்னல் அடிக்குது, என்னே மயக்குது;
தேன்மொழி யேமுத்து வீராயி,
சாந்துப் பொட்டடி நான்உனக்குச்
சவ்வாதுப் பொட்டடி நீஎனக்குச்
சாந்துப் பொட்டுக்கும் சவ்வாதுப் பொட்டுக்கும்
சம்மத மோமுத்து வீராயி?

## ஆகாதோ?

வாய்க்கால் வெட்டி வரப்பு வெட்டித்
தண்ணிக்குப் போற பொண்ணே,
தண்ணிக் குடத்தை இறக்கி வச்சு
என்னுடன் வந்தால் ஆகாதோ?

---

*தன்னே மறந்ததைக் கேளுங்கடி

## ஒதுங்கிப் போனல் ஆகாதோ?

ஓடறுத்துக் கல்அறுத்துச் - சாமி
உதியமரம் தூண்அறுத்து
சின்னச் சின்ன ஓடறுத்துச்
சிமிழி போலப் பாலம் கட்டி
பாலத்தின் மேலே போறவரே, - செத்தெ
ஒதுங்கிப் போனல் ஆகாதோ?

## தெம்மாங்கு

நாலு முத்தம் வாசலிலே - நான் படுத்துத் தூங்கையிலே
பார்த்துவிட்டுப் போனசாமி, பாவம், வந்தா என்ன
செய்வோம்?
புன்னைமரச் சோலையிலே பூஎடுக்கப் போகையிலே
புண்ணியரைக் கண்டீங்களா?........
ரோட்டு மேலே ரோட்டுப் போட்டு
ரோட்டோரம் போற சாமி,
ரோட்டை விட்டுக் கீழிறங்கி
[இங்கே வந்தால் ஆகாதோ?]
காளை, கறுத்த காளை
கண்ணுட்டி மயிலைக் காளை
திசைமாறிப் போன காளை
தேடிவந்தால் விட்டிடுங்கோ;
சாயச் சரிகைச் சேலை,
சாத்தனூரு வெள்ளைச் சேலை
ஆரு குடுத்த சேலை
ஆல வட்டம் போடுதடி?
ஆரும் குடுக்க வில்லை; - நான்
களவாண்டு வருக வில்லை;
கைப்பாடு பட்டு நல்லா
எடுத்துக் கொண்ட சாயச் சேலை.

## வேலாயிக் குட்டி

வேலிஓரம் வாற புள்ளே - நம்ப
வேலாயிக் குட்டி தாண்டா;
காலைக் கஞ்சி யோட வந்தால் - நம்ப
காதடைப்புத் தீருமடா!

## லவங்கப் பூ

முத்தி முத்திப் போடி மீனாட்சி;-அடி
முத்தம் தெளிக்கிற* காமாட்சி
மச்சினப் பிள்ளைக்கு மருந்து வைக்கிற
நீதாண்டி பொண்ணே, லவங்கப்பூ.

## வெள்ளரிக்காய்க் கூடைக்காரி

வெள்ளை வெள்ளைச் சீலைக்காரி,
வெள்ள ரிக்காய்க் கூடைக்காரி,
கோணல் மாணல் வெள்ளரிக்காய்
கொண்டு வாடி தின்னு பார்ப்போம்.

## நான்தாண்டி உன் புருஷன்

மூக்குத்தி போட்டவளே,
மூணு பணம் கேட்டவளே,
நாக்குச் சிவந்தவளே,
நான்தாண்டி. உன்புருசன்.

## பொன் ஓலை

ஆரு காதிலே பொன்ஓலை?
அம்மணி காதிலே பொன்ஓலை.

---

(பா-ம்) தெறிக்கிற.

அம்மணி ஆம்படையான் எங்கே போனுன்?
சாரட்டுச் சக்கரம் சுத்தப் போனுன்;
சக்கிலி கொம்பை ஊதப் போனுன்.

## தொள்ளேக்காது

என்னடி என்னடி, சின்னப் பொண்ணு - உனக்கு
எந்நேரம் பார்த்தாலும் தொள்ளேக்காது?
தொள்ளேக்காதில் ஒரு தோசை கட்டித்
தொண்ணூறு காக்காயைக் கொத்த விடு.

## துண்டு துணுக்குகள்

காலிலே பாடகம் கிலுக்குதடி - தங்கமே
இடையிலே சேலே இழுக்குதடி - தங்கமே
காதிலே தோடு கனக்குதடி - தங்கமே
மூக்கிலே பொட்டு மினுக்குதடி - தங்கமே
எல்லாம் சரிதானடி - தங்கமே
இட துகண்தான் பொட்டையடி!

## பூ ரவிக்கை

புளியம் பூவிலே ரவிக்கை தைச்சேன் பாபு,
என்னுவிலே பாபு?
திரேகத்திலே போட்டுப் பார்த்தால்
கண்ணுலங்குடி சோப்பு;
காக்காய்ப் பூவிலே ரவிக்கை தச்சு
இடுங்கலியா பாபு?
கொடுங்கலியா பாபு?
திரேகத்திலே போட்டுப் பார்த்தால்
கண்ணுலங்கடி சோப்பு.

## புருஷன் பெண்டாட்டி வினவிடை

இரவல் தண்டையாம், பூச்சிக் கூடாம்;
ஏத்திருக்குதா புருஷா?
சத்தி ரத்திலே சகுனம் கேட்டேன்;
சரியா யிருக்குது பொண்டாட்டி.

## அவள் குறை

ஈரமயிரை அவிழ்த்து இருளக்காப் பட்டுடுத்தி
இருந்த நகையும் கட்டி - நான் பொறந்த
ஈந்திக்கே வந்தாலும்
ஈந்திக் கிடுகிடென்னு இருந்தஜனம்* கைஎடுப்பார்.
காய்ந்த மயிரை அவிழ்ந்துக் கடலக்காப் பட்டுடுத்திக்
கனத்த நகைபூட்டி - நான் பொறந்த
காந்திக்கே வந்தாலும்
காந்தி கிடுகிடென்னும்; கண்டஜனம் கைஎடுக்கும்;
பட்டை உடுத்திக்கினு - நான்பொறந்த
பட்டணம் போனாலும்
பங்குக்கு வாறேனுன்னு படலை மறையவைப்பாள்;
பாப்பானைக் காவல்வைப்பாள்.
சிவப்பு உடுத்திக்கினு - நான்பொறந்த
சீமைக்குநான் போனாலும்
சீருக்கு வாரேனுன்னு செவரை மறைவு வைப்பாள்.
சேவகனைக் காவல் வைப்பாள்.
கடலை பயறல்லவோ?-நான்-கசங்காத பொண்
அல்லவோ?
கசக்கிப் புழியுருங்க; காதம்நின்னு பாருங்களே.
துவரை பயறல்லவோ? துவளாத பொண்அல்லவோ?
துவட்டிப் பிழியுருங்க;-தூர நின்னு பாருங்களே.

---

(பா-ம்) * இருந்தசாமி.

## காசு பறிப்பவள்

ரோட்டோரம் வீட்டுக் காரி,
ரோஜாப்பூச் சேலைக் காரி
காதோரம் கொண்டைக் காரி, - அவள்
காசு பறிப்பதில் கெட்டிக் காரி.

## குடி கெடுப்பவன்

முன்னம் என்குடி கெடுத்தநீ
முப்பது சக்கரம்* அழிச்ச நீ
பின்னை என்னடி கெடுக்கவோ
திண்ணையிலே வந்திருக்கிருய்?

## குறிப்புப் பாட்டு

[பூவரசம் பூ அயல் வீட்டிலே விழ, அதைப் பெருக்கினவள் குறை கூற, அப்போது நொந்து பாடியது. உள்ளுறை வேறு.]

பூவரசம் பூவே, பொழுதிருக்கப் பூத்த பூவே,
நாதியத்த பூவினுலே நான் ஒரு பேச்சுக் கேட்டேன்.

## ராதாபாயிக்கு

ஆறுமணி வண்டியிலே புதுக்கோட்டை போகையிலே
கண்மணியே, ராதாபாயி, கல்கண்டு வாங்கித் தாரேன்;
தாகத்துக்குத் தண்ணிதாரேன்; தயிர்மோரு
வாங்கித்தாரேன்;
கொறநாட்டுப் புடவை தாரேன்; புதுக்கோட்டை
வில்லைதாரேன்;
ஓடிப்போய் என்ன குத்தம்? அஞ்சாதேடி ராதாபாயி,
ஆதரிக்கக் கங்கா தாரேன்; [அன்புடனே எல்லாம் தாரேன்,]

* சக்கரம் - பணம்.

எனக்கும் கல்யாணம் இல்லே; உனக்கும் புருஷன் இல்லே.
கண்மறைவாய்ப் போயி நாம்பள் கலந்திருப்போம்
இருவருமாய்.



உல்லாஸமாய்இருப்போம் [ஒருகுறையும் இல்லாமல்]
தஞ்சாவூரு ரெயிலேறி மாயவரம் வந்திறங்கி
மாமரத்து மேடையிலே பதுங்கியிருந்தாள் ராதா பாயி.
அம்பா பாயி சத்திரத்தில் புதுமையெல்லாம் சொல்லிக்
கொண்டாள்.
கேட்டிருந்தான் தியாகராஜன்; பார்த்திருந்தான்
நாராயணன்;
சொல்லிக்கொண்டாள் ராதாபாயி; சிரிச்சுக் கொண்டான்
மணியக்காரன்.
பத்துமணி நேரத்திலே இன்ஸ்பெக்டர் வாசலிலே,
புதுமைஎல்லாம் சொல்லிக் கொண்டாள்; பொதுஜனங்கள்
கேட்டிருந்தார்;
அநாதிநானும், என்னே ஆதரிக்க ஒருவர் இல்லே;
நியாயம் தீர்க்க வேணுமென்றுள்: நல்லதென்றுர்
இன்ஸ்பெக்டர்;
ஒருபடி அரிசிகொடுத்து உப்புப்புளி வாங்கிக் கொடுத்துப்
பத்துரூபாய் பணமும் கொடுத்துப் பட்டணம்போகத் திட்டம்
செய்தார்,

## மறுப்பு

பொண்டாட்டி கிண்டாட்டி கேக்காதடா - நான்
மீசைமேலே கொள்ளிக்கட்டை வச்சிடுவேன்.

## நான் வரவில்லே திருநாளுக்கு

தலேமேலே என்னடி? மார்மேலே கைலாசம்,
மார்மேலே கைலாசம், மடிமேலே முத்துவடம்,
அத்தை பெத்த செல்வமே, அம்மா ஞேட குரங்கே,

கோவில் புருவே; கும்பிடுறேன் சாமி,
நான்வல்லே திரு நாளைக்கு
மாமா காதிலே கடுக்கனில்லை.

## பெண்ணும் தேரும்

தேர்முட்டாம்* பூஎடுத்துச் செண்டுகட்டி னுனும்;
ரெண்டரைஅணுக் குட்டை வாங்கி மேலே
போட்டானும்;
பையன் தேரைப் பாப்பானு? பையன்பொன்ணைப்
பாப்பானு?

## ஆடும் கோனும்

[ராஜகுமாரன் மந்திரி மகள் மேல் காதல் கொண்டான். தோட்டத்தில் சந்தித்து இனிய மொழிகள் பேசினுன், பேச்சளவோடு நின்றது. இதை உணர்ந்து அரசன் மந்திரியைக் கண்டதும், ''மந்திரி வீட்டுத் தோட்டத்திலே ரோஜாப்பூப் பூத்திருக்குது. வாய்க்கு எட்டுகிற தூரம் கைக்கு எட்டலே'' என்று சொல்லி, ''இதற்கு விடை நாளைக்குள் கூருவிடில் உன் தலை போய்விடும்'' என்ருன்.

மந்திரி வீடு சென்று வாடிய முகத்தோடு இருந்தான். மந்திரி மகள் விஷயம் என்ன வென்று கேட்க, விடுகதையைக் கூறிப் பதில் தெரியாமல் அஞ்சியதைத் தெரிவித்தான். மகள் சூக்ஷ்மம் அறிந்து தேற்றிக் காலையில் பதில் கூறுவதாகச் சொன்னுள். பிறகு மந்திரி உண்டு உறங்கிக் காலையில் போவதற்குமுன் மகளைக் கேட்க, அவள் கூறிய பதில்.]

---

(பா-ம்.)* தேர்முட்டும்

வேலங் --ட்டிலே ஆட்டைமேச்சு
வேங்கைக் குட்டையிலே தண்ணியைக் காட்டிக்
கோணை மேட்டிலே கிடையை நிறுத்திக்
கோனர் போய் ஆட்டை எழுப்பணுமா?
ஆடு போய்க் கோனரை எழுப்புமா?

['இதைப் போல ராஜகுமாரன் தான் வந்து, என்கையை பற்ற வேண்டுமே ஒழிய, நானா பற்றுவேன்?' என்று மறை பொருளாகக் கூறினள். மந்திரியும் அரசன் மதிப்பைப் பெறு மாறு பதில் உரைத்தான்.]

## பரிசம் போட்ட மாமன்

பூபூ, புளியம்பூ, பொன்னுங் கண்ணிக்குத் தாழம்பூ;
காய் காய் கறுப்பங்காய்;கஞ்சி வடிக்கிற நெல்லிக்காய்;
ஓடி ஓடி மொளகாய் அரைச்சு
ஒன்பது சட்டியில் கறியாக்கிப்
பார்க்க வந்தான் என்மாமன்;
பரிசம் போட்டான் என்மாமன்,
அடியடா, புடியடா, அத்திமரத்திலே* சாயடா.

## கல்யாணம்

தும்பி,துளசி, தூக்கிப் போட்ட மம்முட்டி,
கத்திரிக்காய் சுட்டுக் காசுக்கு ரெண்டு;
அந்திச் சோறு முந்திப் போச்சு;
கொக்குக்கும் குருவிக்கும் கோபால சாமிக்கும்
எப்போ கண்ணாலம்? நாளைக்குக் கண்ணாலம்.
புதைபுதைக்கற செட்டிக்குப் பொறக்கமாசம் கண்ணாலம்
அப்படியாக் கொந்த செட்டிக்கு ஆவணிமாசம்
கண்ணாலம்,
இப்படியாக் கொந்த செட்டிக்கு இந்த மாசம் கண்ணாலம்.

(பா-ம்) * அடிமரத்திலே.

## எங்கே போகிறாய்?

புளியம்பூப் பூக்கும் இப்போ
புளியம்பூச் சேலைக்காரி,
சுழிச்சு நெளிச்சு எங்கே
சுருக்கா நடந்து போறே?
மாட்டு வண்டி கட்டுங் கன்னு
மாமாவைச் சொல்லிப் புட்டுக்
காட்டுக்குக் கஞ்சி கொண்டு
கடுவெயில்லே போறேன் மச்சான்!
எத்தனைநாள் காத்திருப்பேன்?
இன்பமே, தங்கக்கட்டி,
மெத்தநாள் என்னுக்க
மெலிஞ்சிடுவன் உன்னாலே;
பொறுத்தது பொறுத்த மச்சான்,
புரட்டாசி வந்திடட்டும்;
அறுப்பெல்லாம் முடிஞ்சதுமே
அமக்களமாக் கல்யாணம்!

## என்ன சொன்னார்?

அடுத்த விட்டு ராம சுந்தரம் என்ன சொன்னாராம்?
அங்கே போற பாகற் காயை வாங்கச் சொன்னாராம்;
அதற்கு மாதிரி நெய்யை ஊத்தி வதக்கச் சொன்னாராம்,
கறியைக் காச்சி முன்னாலே வைக்க ரத்தம் என்றாராம்;
புள்ளையைப் பெத்து முன்னாலே வைக்கப் பொம்மை
என்றாராம்.

## பழம் பறிப்பவள் காதலி

பாலைப் பழமேயடி; பழம்பறிக்கும் சண்பகமே,
நீலக் கருங்குயிலே, நிற்கட்டுமா? போகட்டுமா?
நிற்கச் சொன்னால் நெடுந்தூரம்; போகச் சொன்னால்
பொல்லாப்பு.

## எப்போது கல்யாணம்?

அப்பப்பா, சுப்பிர மணியா,
எப்பப்பா கலியாணம்?
காடு தழையட்டும்;
கண்டாங்கி நெய்யட்டும்;
பொண்ணு சமையட்டும்;
பொறக்கற மாசம் கலியாணம்.

## பெண் பார்த்தல்

வெங்காயப் பல்லிமகன் பொண்கேக்க வாராளும்;
பொண்ணை ஒசத்திடுங்க; பொருத்தமில்லே யின்னிடுங்க;
நாளை ஒசத்திடுங்க; நாழியில்லை யின்னிடுங்க.

## பலிஞ்சடு குடு

தங்கப் பிரம்பெடுத்துச்
சிங்காரமாய் வீசிக்கொண்டு
தாலிகட்ட வாரேண்டா, வாரேண்டா........

## திருடன் கொண்டு போனான்

தாலி என்ன தாலி? தங்கப் பொன்னுத் தாலி;
கூறை என்ன கூறை? குண்டுமணிக் கூறை.
கொண்டு வந்தான் கட்ட; திருடன் கொண்டு போனான்.

## பெண்ணின் ரோசம்

காக்காச் சோளமும் கருஞ் சோளமும்
கலந்து குத்தியே நான்வடிச்சேன்;
இந்தச் சோத்துக்கு வக்கணம் பேசுறாய்;
இந்தாடா பயலே, உன்தாலி.

## சின்னி பொம்மா

போருனே சின்னி பொம்மா
பொறந்த இடங்கள் தேடி;
வாருளே சின்னிபொம்மா
வாழ்ந்த இடங்கள் தேடி.

## பெண்ணின் புலம்பல்

[மலையாள வைதிகனுக்கு வாழ்க்கைப்பட்டவள்சொன்னது.]
1. வைதிகன்என்று அறியாமல் மாலையிட்டேன்-பாவி
வருத்தம் கெட்டத்ரோகி என்னைப் படுத்திவிட்டான்
அம்மா.
2. அம்மாஎன் கர்மமடி; ஆரும் என்னசெய்வா?
அசடனுக்கு வாழ்க்கைப்பட்டு ஆப்புட்டு முழிக்கிறேன்.
3. தலைவாரி முடிஞ்சாலென்ன? சாந்துப் பொட்டை இட்டுச்
சதிராடி நின்னுலும் சாச்சுமுகம் பாரான்.
4. சபையலங்கா ரப்புடவை சரிகைபோட்ட ரவிக்கை,
எந்தவிதம் உடுத்தினுலும் எடுத்துமுகம் பாரான்.
5. மலையாள தேசத்திலே மாப்பிள்ளை கிடையாதே;
மடிந்தாளே என்னைக்கொண்டு மாபாவி தாயரர்.

## ராஜா வருவார்

ராஜா வருவாருன்னு ரோஜாப்பூ வாங்கிவச்சேன்.
ராஜா வரவில்லையே!
ரோஜாப்பூ வாடிப் போச்சே!
மன்னர் வருவாருன்னு மல்லிகைப்பூ வாங்கிவச்சேன்,
மன்னர் வரவில்லையே!
மல்லிகைப்பூ வாடிப் போச்சே!

## வெண்ணிலா

வீதியிலே வளைந்துவரும் வெண்ணிலாவே-நீ
விளைந்தவண்ணம்ஏது சொல்வாய்? வெண்ணிலாவே,-நீ

அந்தரத்தில் சேவைசெய்யும் வெண்ணிலாவே-நீ
ஐயர்வந்தால் ஏதுசொல்வாய்? வெண்ணிலாவே-நீ
ஞானமய மாய்விளங்கும் வெண்ணிலாவே-நீ
நான் அறியச் சொல்லுகண்டாய் வெண்ணிலாவே-நீ
ஆரும்அறி யாமலே வெண்ணிலாவே-நீ
அவர்வரு வாரோ? சொல்லாய், வெண்ணிலாவே!

## சேர்ந்ததோ?

ஓடுகின்ற தண்ணியிலே உரைச்சுவிட்டேன் சந்தனத்தை;
சேர்ந்ததோ, சேரலையோ? செவத்தபையன் நெத்தியிலே?

## அக்காள்

அடேபையா, குல்லாக் காரா!-உன்
அக்கா போராடா;
போனல் போரா; பொட்டிமகள்;
பொழைக்க மாட்டாடா.



அக்கா, அக்காடி, சின்னி அக்காடி,
தெற்கத்திப் பள்ளப்பயல் தொட்டுப்புட்டாண்டி;
இந்நேரம் மாயவரம் போயிருப்பாண்டி.

## நல்ல தங்காள்

அண்ணி அறிவாளோடி?
　　அரிவையைத் தேடுவாளோடி;
மதனி அறிவாளோடி?
　　மலைக்குறத்தி புள்ளையடி;
மூளிஉட் காரச்சொல்லித்
　　தானே-மூக்காலி போட்டிடுவாள்;
மூளிவெண்ணெய்த் தடுக்கிடுவாள்;
　　ஒய்யாரம் பண்ணிடுவாள்.
நிர்த்தூளி வாசலிலே
　　நின்றிருக்க நியாயம்உண்டா?

கட்டாணி வாசலிலே
　　காத்திருக்க நியாயம்உண்டா?
அறுத்தகைச் சுண்ணும்பாடா
　　அடும்பாவி!....

## அத்தைமகள் சல்லாபம்

அத்தை மகளே, அமராவதியே,-கண்ணே உனக்குத்
தாலிகட்ட வந்தேனடி; தாலி உனக்குக் கட்டியாச்சு;
தனிவீடும் விடலாச்சு;
பத்துப் பேரும் கூடியாச்சு;-கண்ணே
எட்டுப் பேரும் கூடியாச்சு;-கண்ணே
எணைச் சீரும் பண்ணியாச்சு;
டண்டரண் டணுக்கு மரம்,
ரெண்டணைப்புக் கந்தப்புரம்,
நாலுபுறம் வாழைக் கம்பம்,
நடுவேபூம் பந்தலடி, கண்ணே!

## அத்தையும் மருமகனும்

அத்தை; மாங்கொட்டைத் தலையா, மாமாலைக் கண்ணு,
வாடா மருமகனே-என்கண்ணுளா!

மருமகன்: மாங்கொட்டைத் தலைச்சி, மாங்காய் முலைச்சி,
வந்தேண்டி மாமியாத்தே-ஏமாமி அத்தே!

அத்தை: இப்பத்தான் வந்தியா? நேத்துத்தான் வந்தியா?
சொல்லடா மருமகனே,-என்கண்ணுளா!

மருமகன்: இப்பத்தான் வல்லையே,
　　நேத்துத்தான் வல்லையே;
மத்தியானம் வந்தேனடி-அத்தே.

அத்தை: பச்சரிசி ஆக்கவோ? புழுங்கரிசி ஆக்கவோ?
சொல்லடா மருமகனே,-என்கண்ணுளா!

மருமகன்: பச்சரிசியும் புழுங்கரிசியும் அப்படியே
இருக்கட்டும்;
சாமைச்சோறு ஆக்கடி-அத்தே
கொசகொசன்னு
சாமைச் சோறு ஆக்கடி அத்தே!

அத்தை: வாளைமீனு ஆக்கவோ? வராலு மீனு ஆக்கவோ?
சொல்லடா என் மருமகனே-என்கண்ணாளா!
அந்த, வாளை மீனு வராலு மீனு அப்படியே
இருக்கட்டும்;
நரிக்கறி ஆக்கடி அத்தே-கொழகொழன்னு
நரிக்கறி ஆக்கடி அத்தே.

அத்தை: சின்ன வீட்டைக் கூட்டவோ? பெரிய வீட்டைக்
கூட்டவோ?
சொல்லடா மருமகனே,-என்கண்ணாளா,
சொல்லடா மருமகனே!

மருமகன்: சின்னவீடும் பெரியவீடும் அப்படியே
இருக்கட்டும்;
அடுப்பங் கரையைக் கூட்டடி அத்தே-
மாமியத்தே
அடுப்பங்கரையைக் கூட்டடி அத்தே.

அத்தை: பட்டுப்பாய் போடவோ? கோரைப்பாய்
போடவோ?
சொல்லடா மருமகனே-என்கண்ணாளா!

மருமகன்: பட்டுப்பாயும் கோரைப் பாயும் அப்படியே
இருக்கட்டும்!
ஆட்டுத் தோலு போடடி அத்தே;-மொற
மொறன்னு
ஆட்டுத் தோலு போடடி அத்தே.

அத்தை: சின்னமகள் வேணுமோ? பெரியமகள்
வேணுமோ?
சொல்லடா மருமகனே,-என்கண்ணாளா
சொல்லடா மருமகனே!

மருமகன்: சின்ன மகளும் பெரிய மகளும் அப்படியே
இருக்கட்டும்!
நீதானே வாடி அத்தே-என் மாமிஅத்தே,
நீதானே வாடி அத்தே.

## மாமன் சொன்னது

யாரு வந்தாங்கோ-எங்க-மாமன் வந்தாங்கோ
என்ன சொன்னுங்கோ!
ஆத்திலிருக்கிற பாவக்காயை அறுக்கச் சொன்னுங்கோ
அதிலே கொஞ்சம் நெய்யை ஊத்தி வறுக்கச்
சொன்னுங்கோ;
கொண்டை மேலே கையைப் போட்டுத் தூங்கச்
சொன்னுங்கோ
கோழி கூப்பிட எழுந்திரிச்சு ஓடச் சொன்னுங்கோ.

## மாமியார் மருமகள் சண்டை

மாமியாருக்கும் மருமகளுக்கும் ஏன்வரும் சண்டை?
மாமனுக்கும் மனைவிக்கும் ஏன்வரும் சண்டை?
ஒண்ணின் மேலே ஒண்ணைப் போட்டால் உடனேவரும்
சண்டை.
ஒருபேச்சுத் தாழ்ந்துபோனுல் (உடனே) ஓடிப்போகும்
சண்டை.

## மாமி வருகை

ஆரு வந்தாங்க?-மாமி வந்தாங்க;
ஆத்திலே இருக்கற பாகற் காயை
அறுக்கச் சொன்னுங்க.
அதிலே கொஞ்சம் நெய்யை ஊத்திப்
பொரிக்கச் சொன்னுங்க.
பொரிச்சுக் கிரிச்சு முன்னுலே வைக்கச்
சிரிச்சுக்கிட்டாங்க.
கும்பாவைக் கழுவி யாந்து
கொட்டச் சொன்னுங்க.
கொண்டை மேலே கையை வச்சுத்
தூங்கச் சொன்னுங்க.

## மாமியும் மருமகளும்

மாமி ஒருத்தி மருமகளை ஆண்டகதை:
பூமி அதிர்ந்ததுவும் பூலோகம் பொங்கினதும்
கொற்றவனர் [வேலைக்குக்] கோட்டைக்குப் போனபின்பு
வாடி சிறுக்கி என்ருள்; வரகை அரைஎன்ருள்;
போடி சிறுக்கி என்ருள்; புழுங்கல்நெல்லைக் குத்தும்என்ருள்
தாதிமா ருடனே தண்ணிக்குப் போவென்ருள்;
வெள்ளாட்டி யுடனே வேலைகளைச் செய்யுமென்ருள்;
கோட்டைக்குப் போன கொற்றவனர் வந்தபின்பு
முத்துப்போல் கண்ணீரை முகமெங்கும் சோரவிட்டாள்;
பவளம்போல் கண்ணீரைப் பக்கமெங்கும் சோரவிட்டாள்.
'என்னடி மாது, இளைப்புகள் தோணுது?
போட்டபணி போதாதோ? புதுப்பணி வேணுமோ?
இட்டபணி போதாதோ? எதிர்ப்பணி வேணுமோ?'
'போட்டபணி போதுங்காண்; புதுப்பணி வேண்டாம் காண்;
இட்டபணி போதுங்காண்; இனிப்பணி வேண்டாம் காண்.
'தாயாரின் வீட்டுக்கும் போகப் பிரியம்உண்டோ?
அண்ணன்மார் வீட்டுக்குப் போகப் பிரியம் உண்டோ?'
'தாயாரின் வீட்டுக்குப் போகப் பிரியம் இல்லை;
அண்ணன்மார் வீட்டுக்கும் போகப் பிரியம் இல்லை;
மாமியார் காச்சுவது மட்டிருக்கப் போவதில்லை;
நாத்தனர் காச்சுவது நடுவிருக்கப் போவதில்லை;
கொழுந்தியாள் காச்சுவது கூடஇருக்கப் போவதில்லை.
ஓர்ப்படியாள் காச்சுவது ஒத்திருக்கப் போவதில்லை;
இத்தனை காச்சலிலே என்னமாய் வாழுவேன்?'
'உழக்குப் பணம்கொண்டு ஊரறிய வந்தவளே,
நாழிப் பணம்கொண்டு நாடறிய வந்தவளே,
நாகப் பழத்தை, நான்தின்னும் சர்க்கரையைக்
கோவைப் பழத்தைநீ கொண்டணைச்சால் ஆகாதோ?'
'மெத்தைவிட் டிறங்காத மேனிக் கருங்குயிலே,
கட்டில்விட் டிறங்காத கானக் கருங்குயிலே,

பொழுதும் விடிஞ்சுது; பூவும் மலர்ந்தது;
முத்தம் தெளியாத மூதேவி, எழுந்திரடி,
வாசல் பெருக்காத மாபாவி, எழுந்திரடி.'
'எச்சில் தெறிக்குதத்தே; எட்டநின்னு பேசும்அத்தே;
துப்பி தெறிக்குதத்தே; தூரநின்னு பேசும்அத்தே;
முன்னுடி போலே மெரட்டாதே மாமியத்தே.'
'பார்த்தையடா, பார்த்தையடா, பட்டழிவாள் சொன்ன சொல்லே?
கேட்டையடா, கேட்டையடா, கெட்டழிவாள் சொன்ன சொல்லே?'
[பின் மகளிடத்தில் தன் குறையைச் சொல்லி ஆறுதல் அடைகிறாள்.]

## மாமியார் பிள்ளை

மாமா வந்தாங்கோ;
மடியிலே இருக்கற காசு குடுத்தாங்கோ;
மாமியாருக்குப் புள்ளே பொறந்தது;
புள்ளேயைத் தூக்கிக் கொஞ்சி வளர்த்தேன்.

## வேட்கை

[பெரியோர்கள் ஆசீர்வாதம் செய்வதாகவும் கூறுவர்.]
அத்தைமகள் உத்தமியைக் கொள்ளவே வேண்டும்;
அழகான சிறுதாலி கட்டவே வேண்டும்;
கடவுளேப் பலநாளுந் தொழவே வேண்டும்;
கவிதீரப் பிள்ளேயைப் பெறவே வேண்டும்;
குலம்விளங்கக் கிருஷ்ணுவென் றழைக்கவே வேண்டும்;
குதலேச்சொல் கேட்டுமிக மகிழவே வேண்டும்;
வருத்தம்நோ யில்லாமல் வளரவே வேண்டும்;
வாழையடி வாழையாய் வாழவே வேண்டும்.

## பெண்ணுக்கு வண்டி

பிள்ளைவீட்டார்: மாட்டு வண்டி அனுப்புகிறேன்;
அனுப்பிடுங்க எங்க பொண்ணை.
பெண்வீட்டார்: மாட்டு வண்டியைக் கண்டாக்க
மயங்குமே எங்க பொண்ணு.
பிள்ளைவீட்டார்: குதிரை வண்டி அனுப்பிடறேன்;
அனுப்பிடுங்க எங்க பொண்ணை.
பெண்வீட்டார்: குதிரை வண்டியைக் கண்டாக்கக்
குலுங்குமே எங்க பொண்ணு.
பிள்ளைவீட்டார்: சாரட்டு வண்டி அனுப்பிடறேன்;
அனுப்பிடுங்க எங்க பொண்ணை.
பெண்வீட்டார்: சாரட்டு வண்டியைக் கண்டாக்கச்
சாயுமே எங்க பொண்ணு.

[பிள்ளைவீட்டார் ரதம் ஒன்று அனுப்பப் பெண் தன் கணவன் வீடு வந்துசேரவேண்டும். அப்போது இருதிறத் தாரும் ஒருவரை ஒருவர் ஏசிக் கொள்வார்.]

## மாணிக்கம் பெண்டாட்டி

மாணிக்கம் பொண்டாட்டி கோணிக்கிட்டா;
மன்னூர் சாமியை வேண்டிக்கிட்டா;
அவுத்திக் கீரையைச் சுண்டிக்கிட்டா,
அவுக்கு அவுக்குனு போட்டுக்கிட்டா.

## பெண்ணை அழைத்தல்

ரோட்டோரம் வீட்டுக்காரி, ரோசாப்பூச் சேலைக்காரி,
ரோட்டைவிட்டுக் கீழேவாடி; கேட்டதெல்லாம்
வாங்கித் தாரேன்.
சுத்தியும் முள்ளுமில்ல; சூரங்காய் வேலியில்ல;
வேணுமுன்ன ராசாவுக்கு வேலி எதிருமில்ல;
போன வருஷத்திலே புதுக்கணக்குப் போட்டபுள்ளே,

இந்த வருஷத்திலே ஏத்திட்டாளே தங்கநகை.
அஞ்சரைப் பொட்டிக்குள்ளே குஞ்சலம்போல் நான்
இருந்தேன்;
பார்க்காமல் போறியம்மா, படமெடுத்த நாகம் போலே;
கூடைமேலே கூடைவச்சுக் குமரிப்புள்ளே எங்கேபோறே?
ஏழுமலைக்கு அங்கே இளவட்டம் தேடப்போறேன்.
குன்னிமுத்துப் பாறையிலே குனிஞ்சடிக்கும் வண்ணாரப்
புள்ளே,
நான் போட்ட சரிகைத்துண்டு நைஸா வெளுக்கவில்லை;
நண்டுக்குழி மண்எடுத்து நாகமுடி வளையல்செய்து
வம்பிலே தாலிகட்டி வாழறது எந்தவிதம்?
பொட்டலிலே கெணறுவெட்டிப் பொலிகாளை யிரண்டு
மாட்டி
காலிக்கடை மச்சானுக்கு கமலைஓட்டத் தெரியவில்லை.
கட்டைகட்டைப் பருத்திச்செடி, கணுக்கணுவாய்க்
காய்க்கும்செடி,
எங்களூருப் பொண்களுக்கு மாத்தைக்கொரு ரவிக்கைத்துணி
வட்டப் பொட்டு வையாதேடி; வாசலிலே நில்லாதேடி;
சுத்துவீட்டுக் காரியெல்லாம் சூதா நெனைச்சிடுவா;
சோளவிதை போடையிலே சொன்னியம்மா ஒருவார்த்தை,
சோளம் பயிராச்சு; சொன்னதெல்லாம் வீணாச்சு.
ஆடுமாடு இங்கிருக்க அத்தைமகள் நான்இருக்க,
வீடுவாசல் இங்கிருக்க, வீதிவழி போகலாமோ?
ஆட்டைவித்தேன்; மாட்டைவித்தேன்; அரைக்குலுக்கைத்
தவசம்வித்தேன்;
மாமன்மகள் பேச்சைக் கேட்டு மயிலைக்காளை ரெண்டை
வித்தேன்;
மதுரைக்குப் போகவேண்டாம்; மாங்காய்தேங்காய் வாங்க
வேண்டாம்;
மதுரைக்கடைச் சக்களத்தி கைம்மருந்து வச்சிருப்பா.
வட்டவட்டப் பாறையிலே வரகரிசி தீட்டையிலே
கையைப் புடிக்காதீங்க, கருவளையல் சேதமாகும்;

கோழிமுட்டைத் தோடுபோலே கொழும்புச்சீலைச்
சாயங்காய்ச்சி
உடுத்திப் புறப்படடி, உள்ளூருச் சாமிபார்க்க.

## பெண்ணை அனுப்ப மறுத்தல்

லப்பைப் பொண்ணே, லவங்கப் பூவே,
அப்பன் எங்கே போனுண்டி?
வெள்ளி மலையோரம் வெத்தலையாம் கொடிபுடுங்க.
உண்ணவா மருமகனே, பண்ணினது போதும் அத்தே;
பெண்ணை அனுப்பாயோ? பெற்றோரே சொல்லுங்கள்;
எண்ணெ யில்லை; சீப்புமில்லை;
இளந்தேங்காய் மஞ்சள் இல்லை;
வாரி முடிச்சுக்கொண்டு
வந்திருப்பாள் சந்தினிலே;
சந்தை விலைமதிப்பாள்;
சந்தனத்தைத் தோற்கடிப்பாள்;
பூவை விலைமதிப்பாள்;
பூச்சரத்தைத் தோற்கடிப்பாள்.

## தாழ்ப்பாள்

கருங்கல்லுக் கட்டடமாம்;-காசிநீதிப் பட்டணமாம்;
கன்னிகையாள் வாராளுன்னு கதவுத்தாழ்ப்பாள்
போட்டாங்க.
செங்கல்லுக் கட்டடமாம்; சென்னைநீதிப் பட்டணமாம்;
செல்வி வாராளுன்னு-அவங்க
தெருவுத் தாழ்ப்பாள் போட்டாங்க.

## உன் மனசு இறங்கவில்லையோ?

வாழையடி உன்கூந்தல், வயிரமடி பல்காவி;
ஏழையடி நான்உனக்கு; இரங்கலையோ உன்மனசு?
ஒருத்திக்குத்தான் ஒருமகன்-தங்கமேதங்கம்,
உன்னைநம்பி வந்தேனடி.

## துண்டுதுணுக்கு

கண்டியிலே கடைபொறுக்கிக்
கப்பலிலே துணிபொறுக்கித்
தோணியிலே தொண்ணனுக்குத்
தொடர்ந்துவாடா, நடந்து பார்ப்போம்.

## மாப்பிள்ளை ஏசல்

ஒகோகோ மாப்பிள்ளை, உள்ளத்தைச் சொல்லும்.
கன்னத்திலே கிள்ளுக் காயமே துமக்கு?
தட்டியின்கீழ் நுழைந்தீரோ? துடுப்பாலடி பட்டீரோ?
வெட்கங் கெட்ட மாப்பிள்ளைக்கு வேணுமடி பூசை.
சோபானே, சோபனமே!

## மாப்பிள்ளை ஓடம்

எந்தெந்த ஊரிலுள்ள ஜனங்களெல்லாம் ஓடிவந்தார்?
போகின்ற பேர்களுக்குப் பூனுவில் வேலை என்ருர்.
எலெக்ட்ரிக் ஸாங்ஷன், எம்.ஏ., பி.ஏ., ஸாங்ஷன்;
ஓடி நடந்ததெல்லாம் மாட்டினி ஸாங்ஷன்;
பரபரன்னு சாப்பிடலாம், பத்மநாபன் ஹோட்டல்;
வேண்டியது சாப்பிடலாம், வேங்கடேசன் ஹோட்டல்;
கலெக்ட ரெல்லாம் சாப்பிடலாம், கல்யாணம்
ஹோட்டல்.
காலத்துக் கேத்தாப்போல் கிராப்புத் தலையும்
நாகரிகத்துக் கேத்தாப்போல் நாவல் படிப்பும்;
முகத்துக்கு ஏத்தாப்போல் மூக்குக்கண்ணுடி;
சொல்லிக் குடுத்தாப்போல் சிகரெட், பீடி;
ஆறுமணி அடிச்சதும் ஆறேழு சினிமா;
அஞ்சுமணி ஆனதும் ஈவினிங் சினிமா;
சனிஞாயிறு லீவிலே சீட்டாட்டம் ஜாஸ்தி.
புகையிலை பீடியும் போடுவதும் உண்டு.
அண்ணன்தம்பி இருவருடன் அண்டுவதே இல்லை.

சொந்தக் காரருடன் சொல்லிக்கவும் மாட்டார்.
பந்து ஜனத்தாரைப் பார்க்கவும் மாட்டார்.
சம்பளத்துக் கேத்தாப்போல் ஜம்பமும் ஜாஸ்தி.
பணமென்று சொன்னுலே பழகிஅவர் போவார்.
போனுரே பூனுவைத் தேடி.-ஏலேலோ!

## காராளர் ஊஞ்சல்

[தொண்டை நாட்டில் வேளாளர் வீடுகளில் பாடும் பாட்டு.]

1. செந்நெல்செறி தொண்டைவள நாட்டில் வாழும்
சீராமர்க் கரசுமுடி சூட்டி னேர்கள்
மன்னவர்கள் புகழும்கா ராளர் மீது
வளமைத்தமிழ் தென்னூஞ்சற் கவிதை பாடத்
தன்னிகரி லாதவெள்ளி வெற்பி லேதான்
சதுமுகனும் நாரணனும் போற்ற மேவும்
கன்னிஒரு பாகனும் நாதன் ஈன்ற
கணபதிதன் இருசரணம் காப்ப தாமே.

2. சீர்பூத்த சந்தனக்கால் கூடந் தன்னில்
செழும்பவளத் தால்இரண்டு கால்கள் நாட்டிப்
பார்பூத்த முழுவயிர விட்டம் போட்டுப்
பளபளென மாணிக்கக் கொடுங்கைசேர்த்தே
ஏர்பூத்த வச்சிரத்தால் பலகை பாய்ச்சி
இசைந்ததங்கச் சங்கிலியால் வடங்கள் பூட்டிக்
கார்பூத்த குழலியரே ஆடிர் ஊஞ்சல்;
காராளர் குலதிலகர் ஆடிர் ஊஞ்சல்.

3. வண்ணமே கலையாடக் கரத்தில் மேவும்
வளைஆடப் பொற்கடகம் தானும் ஆடத்
தண்ணமரும் செம்பவளத் தாளினமீது
தண்டைசிலம் பொடுபாத சரமும்ஆடப்
பண்ணமரும் பரத்தைஎதிர் நடனம்ஆடப்
பழமறைவே தியர்அக்ஷதைகள் போடக்
கண்ணிறைர்த மடமயிலே, ஆடிர் ஊஞ்சல்;
காராளர் குலதிலகர் ஆடிர் ஊஞ்சல்.

4. கூந்தல்தனில் தங்கரத்னக் கொட்பி ஆடக்
கோதண்டம் எனும்நுதலில் சுட்டி ஆட
வாய்ந்தமுகம் குறுவேர்வை நிழல்கள் ஆட
வாகான இருகுழையில் மணிகள் ஆடச்
சாய்ந்தமுழு மார்பில்முத்து மாலை ஆடத்
தகதகென இடையில்ஒட்டி யாணம் ஆடக்
காந்தளங்கை மங்கையரே, ஆடிர் ஊசல்;
காராளர் குலதிலகர் ஆடிர் ஊசல்.

5. காதுகளில் பச்சைமுத்துக் கடுக்கன் ஆடக்
கவினிலகு மேல்முருகு கதிர்போல் ஆட
மாதுரமா கியதங்கப் பதக்கம் ஆட
மலர்க்கரத்தில் தங்கவளை கொலுசும் ஆடச்
சோதிபெறும் இடையினிற்பொன் அரைஞாண் ஆடச்
சோமனொடு சாலுவையும் துலங்கி ஆடக்
காதலியும் கணவனுமாய் ஆடிர் ஊஞ்சல்;
காராளர் குலதிலகர் ஆடிர் ஊஞ்சல்.

## ஊடல்

ஏண்டி குட்டி, பேசலை? என்னடிகுட்டி பேசலை?
அடிச்சேனா? புடைச்சேனா? அநியாயம் செய்தேனா?
போன மாசச் சம்பளம் பொட்டியிலே வச்சிருக்கு.
இந்த மாசச் சம்பளம் இடுப்பிலே வச்சிருக்கு.
காப்புப் பண்ணிப் போட்டுக்கோ; கொலுசுபண்ணிப்
போட்டுக்கோ;
மீந்த பணத்திலே மிஞ்சிபண்ணிப் போட்டுக்கோ.
போடாபோ, தடிப்பயலே, உனக்கும் எனக்கும் என்ன
பேச்சு?
கடிச்சுத்தைக்கக் காப்புமில்லை; கையிலே காசும் இல்லை;
கண்டாங்கிச் சேலை வாங்கித்தாரேன் கண்மணியே!
கறுத்தமயிலே, நாகப் பழமே, கண்ணுக்குமை
இட்டுக்கோ.

## மாப்பிள்ளைச் சமையல்

[பண்டிகைக்கு மாப்பிள்ளை, வந்திருக்கும் அத்தை வீட்டுப் பெண்களை, 'என்ன குழம்பு செய்தீர்கள்? என்று யாராயினும் கேட்டால் அவர்கள் சொல்வது.]

கத்திரிக்காய்ப் பால்கறி;
கடலைப் பருப்புக் கூட்டுக்கறி;
மணமான மதராஸ்ரஸம்;
மகாராஜா மயங்கும் பாயசம்;
சுதேசி சாம்பார்;
தஞ்சாவூருத் துவையல்;
தங்கமான பொரியல்;
பொம்பாய் மாப்பிள்ளை சாப்பிடறார்.

## தெம்மாங்கு

[காதலன் காதலியிடம் கூறுதல்]

கஞ்சிக் கலயம் கொண்டு-குட்டி
கருக்கரிவாள் தோளில்வச்சுப்
பில்அறுக்கப் போறபொண்ணே,-ஒரு
பில்லைமரம் காவலோடி?
கட்டில்மெத்தை எல்லாம் இருக்கு;-குட்டி
கால்புடிக்க ஆள்இருக்கு;
தோட்டத் துக்குள் தொட்டி இருக்கு;
துணைமாத்திரம் இல்லையடி;
உப்புப்பாரம் ஏத்தும் வண்டி-குட்டி
உப்பிலிப் பாளையம் போகும் வண்டி;
உப்புநல்லா வித்துச்சுன்னு-உனக்குக்
கொப்புச் செஞ்சு போடுவேண்டி.
கானமயிலே, உன்னைக்-குட்டி
க்கைவிடுவ தில்லையின்னு
மீனாட்சி கோயிலிலே-குட்டி
வேட்டிபோட்டுத் தாண்டித்தாரேன்.

கேட்டெனடி உன்னை நான்;-குட்டி
    கெஞ்சினேனே, நெஞ்சுவர;
மாட்டேனுன்னு சொன்னுயானல்-குட்டி
    நாண்டுக்கிட்டுச் செத்திடுவேன்.

## ஆசாபங்கம்

ஓடுகிற தண்ணியிலே ஆடுகிற பம்பரமே,
பம்பரத்தை நம்பியடி வெண்பிறப்பாய் நிற்கிறேண்டி.
மங்கம்மா சாலையிலே மழைக்கொதுங்கி நிற்கையிலே
செங்கலங்கல் தண்ணியிலே தெரியுதடி உன் அழகு.

## நாற்று நடவுப்பாட்டு

1. ஏலய்யலோ சாலையிலே வீடிருக்கு;
ஏசம்பா, ஏலேலோ, சாத மிருக்கு ஏலேலோ;
சாதிகெட்ட அத்தைமகன் சாதிகுலம் கேக்குறுண்டி;
2. பாறையிலே வீடிருக்கு; [பாத்திரங்கள் பலஇருக்கு.]
பாவிபெத்த அத்தைமகன் பாவிகுலம் பேசறுண்டி.
3. கன்னங் கறுத்தபையா, கைமோதிரம் தந்தபையா,
உருவம் கொலைச்சபையா,உருவிக்கோடா மோதிரத்தை.
4. அஞ்சுகையில் மோதிரமாம்; [தங்கச்சங்கிலி
    மாரிலேயாம்.]
கொஞ்சப்புத்திக் காரரோடு கூடினதும் மோசந்தானே?
5. வெள்ளை நல்லா வெளுத்துக் கட்டி
வீதிவழி போற சாமி,
வெல்லம் மணக்குதடா, வெறும்பயலே, உன்மேலே.

## சம்பாஷணை

[புருஷனுக்கும் பெண்டாட்டிக்கும் சம்பாஷணை.]
வங்கார வடிமுத்துப் பொம்பளே,-கொஞ்சம்
வடிச்ச கஞ்சி, கிடிச்ச கஞ்சி இல்லையோ?

அப்பவே சொன்னையோ ஆம்பளே,-கொஞ்சம்
சம்பா அரிசிபோட்டுச் சமைப்பனே.
சமைச்சுக் கிமைச்சுமே வச்சாலும்-பயல்
சம்மணம் போட்டு உண்பானும்.
தேனிலே இருநாழி வார்த்தாளாம்;-தினை
மாவிலே இம்புட்டு வச்சாளாம்;
பாவிலே இருநாழி வார்த்தாளாம்;-பழஞ்
சோத்திலே இம்புட்டு வச்சாளாம்;
அடி,இத்தனையும் வச்சயே பொம்பளே;-கொஞ்சம்
கடிச்சுக்கக் கருப்பட்டி இல்லையா?
கருப்பட்டிப் பானை கணம்போட்டுத் தொங்குது;
கண்டங் கருவாடு சுரையிலே;
கண்டங் கருவாடு சுரையிலே,-அவள்
கொண்ட கணவனும் வந்திட்டான்.
என்,குடியைக் கெடுக்கவந்த கோமானே,
எறவாணம் பார்த்துமே தொத்தடா.
எறவாணம் பார்த்துமே தொத்தையில்-பயல்
எதிர்க்குச்சி தடுக்கியே விழுந்தானும்.
அடி,திட்டுப்புட் டுன்னுது, என்னடி?-அடி
திருட்டு வெள்ளாட்டிநீ சொல்லடி;
என்னைக்கும் இல்லாத கரும்பூனை
எலியைத் துரத்தியே ஓடிச்சே.
அடி,போனாலும் போகுதே பொம்பளே-பெரிய
போணியில் சோறிட்டது யாருக்கு?
அட,பிள்ளையைப் பெத்த பெரும்பாவி-உன்றன்
பிரிய மகனுக்குச் சோறிட்டேன்;
வடக்காலே தெக்காலே மேக்காலே கிழக்காலே
உள்ளதைச் சொல்லடா, சின்னக் காத்தான்.

## வாடா என் துரையே!

குத்தால நெல்லுக் குத்தி-கொழுக்கட்டை சுட்டுத்
தாரேன்;

வாடா என்துரையே,
கொழுக்கட்டை தின்னுலும் தண்ணித்தாகம் எடுக்கும்;
போடி பெண்மயிலே,
தண்ணித்தாகம் எடுத்தால் நீர்மோரு நான்தாரேன்,
வாடா என்துரையே,
நீர்மோரு சாப்பிட்டால் நித்திரையேவரும்
போடி பெண்மயிலே,
நித்திரை வந்தாலும் தட்டி எழுப்புகிறேன்,
வாடா என்றுரையே.

## காணுமல் போன கடுக்கன்

[காதலியோடு இரவில் துயின்றவன் எழுந்து சென்ற பிறகு கடுக்கன் கழன்று விழுந்ததை அறிந்து வந்து கேட்கிருன். அவள் பதில் சொல்கிருள்.]

**கேள்வி:** ஒன்பது பொன்களோடு
தென்பணி செய்யும்பிள்ளாய்,-உன்
பஞ்சணை மெத்தைமேலே
பாதிரி பூத்த துண்டோ?

**விடை:** பாதிரி பூத்த துண்டு;
பலபேர்கண்பட் டழியவில்லை;
முற்றத்து வாழை இளந்தளிர்மேல்
மல்லிகை பூத்து மலர்ந்ததுண்டு.

## தாலாட்டும் தந்திரம்

ஆராரோ ஆரிரரோ, ஆரமுதே, ஆராரோ,
பாலும் அடுப்பிலேயும் பாலகனுர் தொட்டிலிலும்;
பாலகரைப் பெத்தெடுத்த பத்தாவும் கட்டிலிலே;
அவரை கிலுக்காதே; அவரையின்கீழ் நில்லாதே;
செப்போடின முலையாள் சேனையிலும் காவல்உண்டு
அங்கேபோய்ப் பாலமுது அருந்திவாரும் தம்பியரே.

## எச்சரிக்கை

[சோர நாயகன் வருவதை மணி யொலியால் அறிந்த காதலி, புறப்படப் புகுகையில் கணவன் உண்மை உணர்ந்து தடியுடன் புறப்பட, அவள் தாலாட்டினுல் எச்சரிக்கிருள்.]

தண்டெடுத்தார், தடியெடுத்தார்,
தாமே புறப்பட்டார்;
மணிகட்டி மாடுகளா,
நாக்கைப் புடிச்சு ஓடுங்கள்.

## வருவதற்கு உபாயம்

**காதலன்:**

கல்லிலே கரடிபாயக் கண்டபுலி தெண்டனிட,
நீரிலே குமிழிபாய நிலாவிலே மின்னல்வீசப்
பட்டணம் பாதி காவல், பனமரம் தச்சன் காவல்;
இத்தனை காவலிலே எப்படி வருவேன் மாஞ்சோலை?

**காதலி:**

ஆடு உறங்கட்டும்; அனைவரும் தூங்கட்டும்;
கோழி உறங்கட்டும்; கொழுந்தனுர் தூங்கட்டும்;
மாடு உறங்கட்டும்; மாமனுர் தூங்கட்டும்;
ரெண்டு வெறும்பாக்கு வாயில் இட்டு
வெத்தலையைக் கைப்புடிச்சுச்
சுண்ணும்பு இல்லை என்று சூதாடி வாருங்களேன்.

## சங்கேத வினுவிடை

**ஆண்:** வெந்ததன் மேலே நின்று தின்று
சிவக்கின்ற பெண்பிள்ளாய்,
சோற்றைக் கறிதின்றதும் கண்டீரோ?

**பெண்:** பட்ட மரத்தின் மேலேறிப் படுகுழை தின்னும்மாடே,
கட்டின மாடானுல்போ; கட்டாத மாடானுல் வா.

[புழுங்கல் நெல்லின் மேலே நின்று வெற்றிலே மென்று தின்று வாய் சிவக்கும் பெண்ணே, புழுங்கலேக் கோழி தின்பதைப் பார்த்தாயா? மிதியடிக் கட்டையில் ஏறி வெற்றிலே மெல்லுபவனே, கல்யாண மாயிருந்தால் போ; இல்லேயானுல் வா.]

## துண்டு துணுக்கு

தாலிச் சங்கம் தம்பிடிக் குங்குமம்
தெருவிலே போனுல் பங்கம்.

## வா வா வா!

ரெயில்மேலே போற பொண்ணே,
ரோஜாப்பூ வாங்கித் தாரேன்,
ரெயிலே விட்டுக் கீழ்இறங்கி
வா வா வா!

## சந்தேகம் தீர்ந்த கதை

[ஒருவன் தன் மனேவியை விட்டுவிட்டு ஊருக்குப் போனுன். திரும்பி வந்தபோது தன் வீட்டு வாசலில் தன் நண்பன் செருப்பு இருப்பதைக் கண்டான். மனேவியின்மேல் சந்தேகப்பட்டு, அவளேப் பிறந்தகத்துக்கு அனுப்பி விட்டான். ஒருநாள் மைத்துனன், அவன், நண்பன் மூவரும் சேரும் சந்தர்ப்பம் வாய்த்தது, அப்பொழுது மூவரும் குறிப்பாகப் பேசிக்கொள்கிருர்கள், (பகடை ஆடும் பொழுது பேசிக் கொள்ளுதல்.]

**மைத்துனன்:** ஏதேது வாழை? இளவாழை, செவ்வாழை,
ஏழுநாள் ஆச்சு தண்ணிகுடிச்சு.

**நண்பன்:** பூங்கா வனத்துக்குப் போனதுண்டு-நான்
பூவோட வாசனேயைக் கண்டதில்லே.

**கணவன்:** ஆனேயடி பாதத்தைக் கண்டதுண்டு-நான்
அந்தத் தோஷத்தை ஆனுல் கண்டதில்லே,

## தொட்டுவிட்டாள்

அக்கா, அக்காடி, சின்னி அக்காடி,
தெற்கத்திப் பள்ளப்பயல் தொட்டுப்புட் டாண்டி,
இந்நேரம் மாயவரம் போயிருப்பாண்டி.
அக்கா அக்காடி, பொன்னி அக்காடி,
தெற்கத்திக் கள்ளப்பயல் தீண்டிப்புட்டாண்டி;
இந்நேரம் மாயவரம் போயிருப்பாண்டி.

## நல்லா இல்லே

வாட வெத்தலே வதங்க வெத்தலே வாய்க்கு நல்லால்லே;
நேத்து வச்ச சந்தனப் பொட்டு நெத்திக்கு நல்லால்லே;
குருவி கொத்தின அரளிப்பூவு கொண்டைக்கு
நல்லால்லே;
மாமன் வந்து தோப்பிலே நிற்கிறது மனசுக்கு
நல்லால்லே.

## அறிவிப்பு

ரோட்டோரம் வீட்டுக்காரி,
ரோசாப்பூச் சேலைக்காரி,
நான்வருவேன் சாமத்திலே;
நாதாங்கி போட்டி டாதே.

## அலங்காரம்

ஆரடி பொண்ணே, கம்பங் கொல்லையிலே?
நான்தான் சாமி, கமலப் பொண்ணு;
வாயேண்டி பொண்ணே, குஜ்ஜிலிக் கடைக்கு;
வந்தேன் நான் சாமி, குஜ்ஜிலிக் கடைக்கு;
கஸ்தூரி மஞ்சள் வாங்கேண்டி பொண்ணே;
வாங்கினேனே, சாமி, கஸ்தூரி மஞ்சள்;

அம்மி குளிர அரையேண்டி பொண்ணே;
அரைச்சேனேநான், சாமி, அம்மி குளிர;
மூஞ்சி குளிரப் பூசேண்டி பொண்ணே;
பூசினேனே சாமி, மூஞ்சி குளிர;
பட்டுப் புடைவையைக் கட்டேண்டி பொண்ணே,
கட்டினேனே சாமி, பட்டுப் புடைவையை;
புள்ளி ரவிக்கையைப் போடேண்டி பொண்ணே,
போட்டேனே சாமி புள்ளி ரவிக்கையை;
போடேண்டி பொண்ணே, டமாரக் கொண்டையை;
போட்டேனே சாமி, டமாரக் கொண்டையை;
ரெயில்வண்டி ஓடுது, ரோஜாப்பூக் கொண்டையிலே,

## அறுவடையில் காதல்

வரப்பிலே கட்டுத் தூக்கி வளைஞ்சு வளைஞ்சு வாறவளே,
சரசர என்றுபின்னே சாரைப் பாம்பு வருகுதடி.
பாம்பென்று சொல்லி என்னைப் பயமுறுத்த முடியாது;
தாம்போட்ட நேர மாச்சு; தள்ளிப்போ விழுந்திடாமே;
விழுந்தாலும் தூக்கிவிட* வேகமாக வேவருவேன்.
கொழுந்திலே உடம்பைத் தொடக்
கும்மாளம் போடுதடி!
விழுந்திட்டால் எழுந்திருக்க வொறைப் பிருக்கு
உனக்குமேலே;
பழுத்தபழம் கைபட்டால் பச்சைமனம் துள்ளிவிடும்.

## நடவில் காதல்

முல்லைச் சிரிப்புக்காரி, முந்தாணி நனையுதடி;
நெல்லு விளைஞ்சிடுதல் நேக்கான கைநடவே,
நடவுக்குக் குறைச்சல்இல்லை;நல்லவேலை செஞ்சிடணும்,
அடமான பேச்சாலே ஆளை மயக்காதே.

---

(பா-ம்.) *எடுத்துவிட. உன்உடம்பைத் கண்குளிரப் பர்ப்பேனடி.

அழகான கொண்டைக்காரி, ஆசை வச்சேன்
உன்மேலே;
பழகியே வாரேனடி; பசைஒண்ணும் இல்லையடி;
நாலு காசைப் பாத்து வச்சு நல்ல நாளும் பாத்துவச்சு,
வாலுத்தனம் செய்யாமல் மாமாவைக் கேட்டுமுடி.

## வழிநடையில் காதல்

ரோசாப்பூச் சேலைக்காரி, ரோட்டிலே பார்த்து வாடி;
காசாலே மிதந்த வள்நீ; காளைகள் பாயுமடி;
அடியென்று சொல்லாதே; அறைஞ்சிடுவேன்
கன்னத்திலே.
தடிப்பயல் போலிங்கே தம்பிடியும் சேர்க்காமல்.
பணம்எல்லாம் வச்சிருக்கேன்; பஞ்சவர்ணக்கிளியே,
குணம் இல்லா உன்தகப்பன் குடுப்பானோ எனக்குன்னை?
வாய்ப்பேச்சுப் பேசாமே வகையா நடந்துக்கணும்.
தாய்தகப்பன் என்சொல்லைத் தட்டவே மாட்டாங்க.

## கதிர் அறுக்கப் போகிறவள்

(வண்டிக்காரன் பாட்டு)

கண்ணாடி வளையல் தொட்டு கதிர் அறுக்கப் போற
பொண்ணே,
கண்ணாடி மின்னலுக்கு, என்னால், கதிர் அறுக்கக்
கூடலையே!
நீல வளையல்தொட்டு நெல்லறுக்கப் போற பொண்ணே,
நீலவளை மின்னலுக்கு-இங்கே-நெஞ்சுநிலை கொள்ளலையே!
தங்க வளையல்தொட்டுத் தண்ணிஎடுக்கப் போற
பொண்ணே,
தங்கவளை மின்னலாலே-நான்-தத்தளித்து நிற்கிறேனே!

## தங்கப் பாட்டு

கம்புகுத்திச் சோறாக்கிக் கடலைப் பருப்பாக்கி
வட்டியிலே போடையிலே-தங்கமே,

வந்துதடி தூக்குமரம்.
தூக்குமரம் என்னசெய்யும்? சூட்சக் காலு
என்னசெய்யும்?
மாடுதின்னி வெள்ளைக் காரன்-தங்கமே,
மாயமாய்ப் பறக்கிருண்டி.
சின்னச் சின்ன வண்டி பூட்டி
செவலைக் காளை ரெண்டும் கட்டி
வாழைக்குலைப் பாரம் ஏத்தித்-தங்கமே,
வாராண்டி உன் கணவன்

## உன் புருஷன்

சின்னச் சின்ன வண்டி கட்டிச்
செவத்த மாடு ரெண்டு பூட்டி
வாழைக்காய்ப் பாரம் ஏத்தி
வாராண்டி, உன்புருசன்.
மாடுமோ செத்தல் மாடு,
மணலுமோ கும்பிமணல்,
மாடிழுக்க மாட்டாமல்
மாய்கிருண்டி உன்புருசன்.

## புருஷனும் சோரநாயகனும்

சந்தனக் கட்டை தனிக்கட்டை வேகறச்சே
குங்குமக் கட்டை கூட எரிஞ்சால் ஆகாதோ?
நான்-செங்கரும்பு வெட்டிச் சிறையில் அடைச்சு வச்சேன்;
நீ-தின்னுருசி கண்டவன் திக்குளிச்சால் ஆகாதோ?

## படகுப் பாட்டு

மண்ணை நம்பி- ஏலேலோ- மரம் இருக்க-ஐலசா
மரத்தைநம்பி - ஏலேலோ - கிளைஇருக்க - ஐலசா
கிளையைநம்பி - ஏலேலோ - கோல்இருக்க - ஐலசா
கோலைநம்பி - ஏலேலோ - இலைஇருக்க - ஐலசா
இலையைநம்பி - ஏலேலோ - பூஇருக்க - ஐலசா

பூவைநம்பி - ஏலேலோ - பிஞ்சிருக்க - ஐலசா
பிஞ்சைநம்பி - ஏலேலோ - காய்இருக்க - ஐலசா
காயைநம்பி - ஏலேலோ - பழம்இருக்க - ஐலசா
பழத்தைநம்பி - ஏலேலோ - நீஇருக்க - ஐலசா
உன்னைநம்பி ஏலேலோ - நான் இருக்கேன் - ஐலசா.

## சம்பந்தி ஓலை

ஸ்ரீமது சகலகுண சம்பன்ன ரான,
மகாமேரு சமான தீர ரான,
அகண்டித லக்ஷ்மீ ப்ரசன்ன ரான,
ஆடவாளு அதிப்ரசன்ன ரான,
மொகவாளு ஸர்வ முட்டாள ரான,
அதியபகார உபகார போஷக ரான,
பந்துஜன பூஷித ரான,
நெல்லுக்கு நிகரான,
சொல்லுக்கு ஹரிச் சந்த்ரனை,
அன்ன தானம், கன்யா தானம்,
ஆட்டாட்டம் அறுபத்து நாலாந்தேதி
அந்தன மாசம், இந்தன வருஷம்,
இந்த ஆகாசத்தில்—
அவரை போட்டால் துவரை முளைக்கும்.
துவரை போட்டால் அவரை முளைக்கும்.
நெல்லுப் போட்டால் புல்லு முளைக்கும்.
புல்லுப் போட்டால் நெல்லு முளைக்கும்.
ஆடு முட்டையிடும்; கோழி கறக்கும்.
மூத்தாருக்கு மூத்தார்; முன்னோருக்கு இளையார்.
காதாலே குருடு; கண்ணாலே செவிடு.
இப்படி யாகப்பட்ட ரூபத்தினாலே
இருக்கப்பட்ட தாகவும்—
ஓகோகோ என்னென்ன, ஏதேது, நம்ம சம்பந்தி
அம்மாள்,

தும்பை என்கிற விருட்சத்தின் மேல்ஏறி
இலைபறிக்கச் சொன்னார்கள்; ஏறிஇலைபறித்தார்கள்.
அதிலே ஒரு ஓணான் என்ற மிருகத்தைக் கண்டு
அலறி அடிச்சுக் கொப்புத் தவறிக்
கீழே விழுந்தார்கள்.
அகட விகட மணி மகுட
விஸ்தார மான கத்காரி முள்ளு
உச்சந் தலையிலே தச்சு
உள்ளங் காலிலே தோணப்பட்ட தாகவும்
கவிழ்ந்து நிமிர்ந்து பல்லிலே கௌவிப் பார்த்தார்கள்.
பல்லுப் போற வழிதவிர முள்ளுவர வழிஇல்லை.
ஓகோகோ என்னென்ன, ஏதேது?
வெகுமோ சங்கள் வந்ததுன்னு சொல்லி
ஆடி ஓடித் திரிஞ்சு
உள்ளூர்ப் பண்டிதரை வரவழைச்சுப் பார்த்தார்கள்.
அந்தப் பண்டிதர் வந்து
கையை விட்டுக் காலைப் புடிச்சுப் பார்த்தார்.
காலை விட்டுக் கையைபுடிச்சுப் பார்த்தார்.
அந்த வைத்தியர்
நம்முடைய கையிலே பலியாதுன்னு சொல்லிப்
பின்வாங்கிக் கொண்டார்.
நம்முடைய சம்மந்திப் பிராமணன்
ஓகோகோ என்னென்ன, ஏதேது?
வெகுமோ சங்கள் வந்ததூன்னு சொல்லி
மேல்ரவுத்துக் கோபால செட்டிப்
பண்டிதருக்கு ஓலை எழுதி அனுப்பிச்சார்கள்.
மேலரவுத்துக் கோபால செட்டிப்
பண்டித ராகப் பட்டவர்
நம்மாலே கூடாதுன்னு சொல்லிவிட்டார்.
கீழ்ரவுத்துக் கோபால செட்டிக்கு
ஓலை எழுதி அனுப்பிச்சார்கள்.
கீழ்ரவுத்துக் கோபால செட்டிப்

பண்டித ராகப் பட்டவர்
தம்மாலே கூடியவரையில்
பார்ப்போமென்று வந்தார்.



பண்டிதர் வருகிறவர் என்னவிதம் என்றால்
மூக்கு மூணுமுழம், நாக்கு நாலுமுழம்;
பல்லுப் பத்துமுழம், உதடு ஒன்பதுமுழம்;
வயிறு வண்ணான் தாழி.
கைநிறையக் கடுக்கனிட்டுக்
காது நிறைய மொதிரம் இட்டுத்
தலைநிறையப் பூட்ஸு கட்டிக்
கால்நிறைய முண்டாசு கட்டிக்
கழுத்து நிறைய அரைஞாண் போட்டுக்
குதிங்கால் விட்டுவிட்டு முழங்காலாலே
குதிச்சுக் குதிச்சு நடந்து வந்தார்கள்.



நம்முடைய சம்பந்தி அம்மாளைக்
கையை விட்டுக் காலைப் புடிச்சுப் பார்த்தார்கள்.
காலைவிட்டுக் கையைப் புடிச்சுப் பார்த்தார்கள்.



ஓகோகோ, என்னென்ன, ஏதேது?
வெகுமோசங்கள் வந்ததுன்னு சொல்லி,
இதற்கு என்னென்ன வரவழைக்கச் சொல்ல
வேண்டியது?



சித்தா முட்டி, பேரா முட்டி,
திருச்செந்தூர் மட்டி, உள்ளூர்க்கோ முட்டி,
மன்னூர் கோயில் மம்முட்டி,
கொக்கு நிழலும் கொக்கோடே தொனியும்

அம்மி நிழலும் அருவரக்கு நிழலும்
உலக்கைக் கொழுந்தும் குந்தாணி வேரும்
நேத்தடிச்ச காத்தும் முந்தா நாள் அடிச்சமழையும்
நாலாம்நாள் அடிச்ச சாரல்
அஞ்சாம்நாள் அடிச்ச வெய்யில்,
எருமை மூத்திரம் இருகலம்,
கொசு மூத்திரம் குறுணி,
நாய் மூத்திரம் நாற்கலம்,
பன்றி மூத்திரம் பதக்கு,
எறும்பு மூத்திரம் இருகலம், இத்தனையும் ஒன்ருகச்
சேர்த்து.
குடிபோன வீட்டிலே அடிபோன மிடாப் போட்டு
உழக்கு ஜலம் விட்டுப் பதக்கு ஜலமாக
வத்த வைக்கச் சொன்னுர்கள்.
காய்ச்சினுர், காய்ச்சினுர், வண்டு, கட்டினுர், கட்டினுர்
நம்ப சம்பந்தி அம்மாளே,
உள்ளங்கையில் குடுத்துப் புறங்கையை நக்கச்
சொன்னுர்கள்.
புறங்கையில் குடுத்து உள்ளங் கையாலே
ஊதி ஊதிக் குடிக்கச் சொன்னுர்கள்.
இந்த மருந்து சாப்பிட்டவுடன்
நம்முடைய சம்பந்தி அம்மாளுக்கு
வஜ்ர தேகம் ஆச்சுது.
சற்று உட்காரப் பட்ட தாகவும்
சற்று நிற்கப் பட்ட தாகவும்
சற்றுத் தவழப்பட்ட தாகவும், சம்பந்திப் பிராமணன்
இதுக்கு,

என்னென்ன பத்தியங்கள் என்றால்,—
அன்னம் அரக்கும்; சோறு சொக்கும்;
கஞ்சிகாமாலை; நெய் நேத்ர வாயு;
பெருகு பெத்தபடி, சந்தோ சகாயனே,
கொஞ்சம் கொஞ்சம் சேர்த்து ஒச்சுனு;
பெத்த கும்மடிக் காயனே,
அரைக்கால் திட்டம் சேர்ச்சு ஒச்சுனு,
நம்முடைய சம்பந்திப் பிராமணன் காட்டுக்குப் போய்க்
காட்டரிசி கொண்டுவந்து ஆணைத்தோணைக் கஞ்சிகாச்சி
ஆயிரத் தெட்டுச் சல்லடையைக் கொண்டுவந்து
ஆத்தி ஆத்திக் குடிக்கச் சொன்னார்கள்.
நம்முடைய சம்பந்திப் பிராமணன்
கோபால செட்டிப் பண்டிதர்மேல்
சந்தோஷம் ஆன படியினாலே
இவருக்கு என்னென்ன பருகுனம்
செய்ய வேண்டியது என்றால்—
நட்டாத்திலே நாற்பது கோட்டை விரைப்பாடு,
சர்வ மாளியம்விடச் சொல்ல வேண்டியது.
ஆனையை உழச்சொல்லி, எலியை விதைக்கச் சொல்லி
நண்டைத் தண்ணி பார்க்கச் சொல்லிப்
பெருச்சாளியைக் கதிர் அறுக்கச் சொல்லி,
ஆடிமாசத்துக் காத்திலே அப்பசி மாசத்து மழையிலே,
ஆத்தித் தூத்திப்பின் போனது போக
முன்போனதைஎடுத்து ஓட்டை மரக்காலிலே அளந்து,
பீத்தற் கோணியிலே பிடிக்கச் சொன்னார்கள்.
சப்பாணி ராவுத்தரை முன்னாலே விட்டு
நம்முடைய கோபால பண்டிதர் வீட்டிலே,
பெருச்சாளிப் பொந்திலே தள்ளிவிட்டு வரச்
சொன்னார்கள்.
குருடன் வாசிக்கச் செவிடன் கேட்க

ஊமை அர்த்தம் சொல்லச் சப்பாணி மரமேற
அகட விகட உத்தண்ட மூளிக்குச்
சபா தாம்பூலம் தீர்க்க மான:

## புருஷன் மனைவி உரையாடல்

**புருஷன்:**

கால மெல்லாம் மறவேனடி கட்டழகி மானே: உன்னைக்
கட்டிஅணைச் சேனே; உனை
விட்டுப்பிரி யேனே.
தொட்டுக் கொண்ட நாள்முதலாப் பட்டெடுத்தேன் நானே
உண்பதுவும் உடுத்துவதும் ஓதுவதும் போச்சே:நீ
எடுத்துச் சொல்ல லாச்சே;:நீ
கொடுத்த தெல்லாம் போச்சே!

**மனைவி:**

கொடுத்ததற்கும் படுத்ததற்கும் சரியாகப் போச்சே.

**புருஷன்:**

சேட்டுக்கடைப் பாதாம் அல்வா தினமும் ஒரு சேரு,
பொட்டணத்தைப் பாரு; நீட்டாதடி ஜோரு;
தட்டி நல்லாத் தின்னதையும் மட்டி, எண்ணிப் பாரு;

**மனைவி:**

ஏங்காணும் என்றனிடம் இங்கேமுறுக் காதே,நீ.
தங்கவரு காதே:........

**புருஷன்:**

தங்கித் தங்கி இருந்திட்டானும்
இணங்குவேனே மாதே,
மணம்முடிக்கும் மல்லிகையும் வாங்கினேனே நாடி; நீ
தினமும் முடிச் சோடிச்-சூடிக் குணமும் கெட்டு தேடி.

வேணமட்டும் பேசிடாதே, வெறுஞ்சிறுக்கி போடி.

**மனைவி:**

வாடியின்னும் போடியின்னும் வார்த்தைகள்பே சாதே:
இங்கே நாடிவரும் தீதே; நீ ஓடியலை யாதே.

**புருஷன்:**

ஓடி ஓடி வந்திட்டாலும் இணங்குவனோ? மாதே,
கண்மணியே, என்றனிடம் காட்டாதடி ஜாலம்; இது
என்னுடைய காலம்;நர்ளைப் பண்ணுறேன்பார் கோலம்;
விண்ணுலகம் வேண்டியுமே கொண்டுவரேன் ஏலம்.

**மனைவி:**

காடுமலை கலங்கினாலும் கலங்குவேனோ? நங்கை :நான்
மலைமுழுங்கி மங்கை;நீ கடுக்காதையே இங்கே; நீ
துடுக்காகவே மிரட்டினாலும் மிரளுவது எங்கே?

**புருஷன்:**

எல்லாம் குடுத்தேனடி, கல்லு மனசு படுவா:நீ
துள்ளா தேடி கெடுவே;:சொல்ல வந்தாய் முடுக்காய்; நான்
வல்லவனாய் இருந்தேனானால் வாங்கிவாறேன் கொடுவாள்.

## மணமக்கள் சல்லாபம்

1. ஈரோப்பியர் செய்தசட்டம், எர்ணா குளத்துக்கு
இங்கிலீஷ் படிக்கப் போனேனண்டி;-கண்ணே நானும்
இஷ்டமாய்ப் படிச்சு வந்தேண்டி, பொண்ணே,

2. அனந்த புரத்திலே அநேகம்பேர் மாஸ்டர்கள்
அழகாகப் பாடம் சொன்னார் பொண்ணே,-நானும்
ஆசையாய்ப் படிச்சு வந்தேண்டி கண்ணே,

3. சேலம், திருநெல்வேலி, திருச்சினுப் பள்ளிமுதல்
சீராயப் படிச்சு வந்தேண்டி, கண்ணே-நானும்
ஜோராய்ப் படிச்சு வந்தேண்டி, கண்ணே.

4. பரீட்சைக்குப் போனலும் பக்குவம் ஆனலும்
பட்டணம்போய் சேர்ந்தபின்பு பொண்ணே-உன்னைக்
பார்க்க வருவேனடி கண்ணே!

5. நானும் வருவேனுன்னு நாயகி வனங்கியே
நயமாகச் சொன்னுளோ?-ஸ்வாமி-இப்போ
சிநேகமாய்ச் சொன்னுளோ ஸ்வாமி?

6. கோகில மேஉன்னைக் கூட்டிக்கொண்டு போகக்
கூடாது இப்போது, பொண்ணே,-எனக்கு
நடவாது இப்போது கண்ணே!

7. காலேஜில் உள்ளபேர்கள் வெகுரொம்பச்
சொல்லுருர்கள்;
வேகமாய் வருவீரோ ஸ்வாமி?

8. இஷ்டமான துரையே, இங்கே வந்துசேர
எத்தனை நாள் செல்லும் ஸ்வாமி,-நீரும்
வெளியிலே போக வேண்டாம் ஸ்வாமி!

9. மாதரசே, இங்கே வந்துசேர இன்னும்
வருஷம் ஒண்ணுமடி பொண்ணே!

10. பிளேக்குகள் என்று சொல்லி பேபரில் கண்டேன்நான்;
பீச்சுக்குப் போகவேண்டாம் ஸ்வாமி.

11. தங்கமே எனக்கங்கே சரியாக வாசிக்க
டயங்கூடப் போதாதடி பொண்ணே;-நானும்
சர்க்கூட்டுப் போவேண்டி கண்ணே.

12. சுந்தரரே, நீரும் சுருக்காப் போய்ச் சேர்ந்தீரானல்
சுருக்காக எழுதுவீரோ ஸ்வாமி?-நீரும்
கார்டுகள் போடுவீரோ ஸ்வாமி?

13. பொற்கொடியே, எனக்குப் போக விடைகொடடி
பொண்ணே,-நீயும்
புகழ்ந்து விடை கொடடி கண்ணே.

14. பணிஞ்சு நமஸ்கரிச்சு மாது சிரோன்மணி
வாழ்த்த நடந்தாரே ராஜர்;-அப்போ
சீக்கிரம் போய்ச் சேர்ந்தார் பட்டணம்.

15. பட்டணம் போனவுடன் சிநேகிதர் எல்லோரும்
சீராய்ப் படிச்சுவந்தார், பொண்ணே-ருது
சாந்திமுகூர்த்தம் வச்சுத் தீர.

16. சட்டமான ராத்திரியில் ரெண்டு பேருமாய்த்
தங்கக் கதவடைச்சுத் தாழ்ப்பாளிட்டார்;-அவள்
பொன்னங் கதவடைச்சுப் பூட்டுமிட்டாள்.

17. காலேஜில் போய்ப்படிச்சுக் காலங்கள் ரொம்ப ஆனாலும்
கண்டேனே இப்பொழுது பொண்ணே,-என்னைக்
கண்திறந்து பாரடி கண்ணே.

18. காசு செலவிடவும் கார்டுகள் எழுதவும்
கணக்கு வழக்கிலையோ ஸ்வாமி?-உமக்குக்
கைகள் சலிக்கலையோ ஸ்வாமி?

19. பிரைவேட்டு லெட்டர்களைப் பாதர் மதர்அறிந்து
பகையாக எண்ணி அதைப் பொண்ணே,-நம்மைப்
பரியாசம் பண்ணினாரோ கண்ணே?

20. பட்டணம்போய் வந்தபின்பு பலர்உப தேசத்தால்
பட்சம் மறந்தீரோ ஸ்வாமி?-என்னைப்
பகையாக எண்ணினீரோ ஸ்வாமி?

21. பட்சம் மறக்கவில்லை; பலர்சொற்கள் நம்பவில்லை;
ஃபாதர் மதர்க்கிப்போ பொண்ணே, நானும்
பயப்பட் டிருந்தேனடி கண்ணே!

22. பரீட்சைக்குப் போனாலும் பாஸுகள் பண்ணினாலும்
ஃபாதர் அறிவாரோடி பொண்ணே,-நீயும்
கார்டுகள் காணலையோ கண்ணே?

23. லெட்டர் கிடைக்கவில்லை; நிஜமுன்னும் தோணவில்லை;
நிச்சய மாகச்சொல்லும் ஸ்வாமி!

24. சிவப்புக்கல் வச்சினபூ சடைநாகம் பண்ணித்தரேன்
செவ்வந்திச் சரம் ஆடலாம் பொண்ணே!-நாம்
டிபன் எடுத்துச் சாப்பிடலாம் கண்ணே!

25. ஜெட்ஜி வேலையாகிச் சேலத்துக்குப் போனுமானால்
ஜெவந்திசரம் சூட்டலாம் ஸ்வாமி!-நீரும்
ஸிவில் பரீட்சை கொடுக்கலாம் ஸ்வாமி!

26. ஒத்தைக்கல் மூக்குத்தி ஒசத்தியாய் வாங்கித் தரேன்;
உதறி விரியடி பொண்ணே;-மெத்தையைத்
தட்டி விரியடி கண்ணே!

27. உத்தம ரே,உமக்குப் பத்தினி வேணுமானால்
உதறி விரிக்கலாம் ஸ்வாமி-இப்போ
தட்டி விரிக்கலாம் ஸ்வாமி!

28. கெடிகாரக் கம்மலும் கிளிநாகமும் பண்ணித்தரேன்,
கிட்டக்க வந்துநில்லு பொண்ணே,-நீயும்
வெட்கப் படாதேடி கண்ணே!

29. கேஸுகள் பேசிவந்தால் ஃபீசுகள் ரொம்பவரும்;
கெடிகாரக் கம்மலும் ஸ்வாமி,-அப்போ
கிளிநாகம் பண்ணலாம் ஸ்வாமி!

30. புதுச்சேரி அட்டிகையும் புதுசாகப் பண்ணித்தரேன்;
பூசடி சந்தனத்தைப் பொண்ணே,-மாரில்
வீசடி விசிறியாலே கண்ணே!

31. புதுச்சேரி அட்டிகையும் புதுசாகப் பண்ணவேண்டாம்;
புக்குகள் வாங்கலாம் ஸ்வாமி-நீரும்
[பொருந்திப் படிக்கலாம் ஸ்வாமி.]

32. பட்டைக் கொலுசும் பாட்டிலும் பண்ணித்தரேன்;
பரியாசம் பேசிக்கொண்டு பொண்ணே,-நாம்
பால்எடுத்துச் சாப்பிடலாம் கண்ணே!

33. பாரிஸ்டர் வேலையாகிப் பட்டணம் போனுமானல்
பட்டைக் கொலுசுளும் ஸ்வாமி,-அப்போ
புதுசாக வாங்கலாம் ஸ்வாமி!

34. பனாஸ் பட்டுத்தரேன்; வெல்வெட்டு ரவிக்கை தரேன்;
பாக்கு எடுத்துத்தா, பொண்ணே,—ஒரு
வெத்தலை மடிச்சுத்தா, கண்ணே!

35. பனாஸ் பட்டுவேண்டாம்; வெல்வெட்டு ரவிக்கை
வேண்டாம்;
பாரிஸ்டர் பரீட்சையாகி ஸ்வாமி,—நீரும்
விலாத்தியில் போய்ப்படியும் ஸ்வாமி!

36. காப்புக் கொலுசுதரேன்; கல்முருகு வாங்கித்தரேன்;
கண்டிப்பாய்ப் பேசடி பொண்ணே—நீயும்
கிட்டக்க வந்துநில்லு கண்ணே!

37. கண்மணியே, உனக்குக் கண்டசரம் பண்ணித்தரேன்;
கால்கடுக்க நிற்காதடி பொண்ணே-இந்தக்
கட்டில்மேலே ஏறடி கண்ணே!

38. வேடிக்கை வார்த்தைகள் வெளியிலே கேட்கிறது;
வெட்கமாய் இருக்கிறது ஸ்வாமி;—நீரும்
மெல்லமாய்ச் சொல்லலாம் ஸ்வாமி!

39. பட்டைக் கமலம்வச்ச பதக்கங்கள் வாங்கித்தரேன்;
பாரடி என்முகத்தைக் கண்ணே,—நீயும்
பாதத்தைப் பார்க்காதேடி பொண்ணே!

## குற்றம் என்ன?

*சின்னச் சின்னச் செடிகுலுங்க*
*சித்ரமணி ரதம்குலுங்க*
*வன்னி மரம் குலுங்க*

வந்திடுங்க என்பிறகே;
மந்தையிலே மாடிருக்க
மந்திரிபெண்கள் நாம்இருக்கக்
கொண்டையிலே பூஇருக்கக்
குத்தம் என்ன ராஜாவே!



சின்னச் சின்ன எந்திரமாம்;
திருஎவ்வுளூர்க் கோபுரமாம்;
எங்களுடைய அத்தைமகன்
என்னைக் கொள்ள மாட்டேன் என்றான்;
மந்தையிலே மாடிருக்க, மதுரைப் பெண்கள்
நாமிருக்கக்
கொண்டையிலே பூஇருக்கக் குத்தமென்ன
ராஜாவே?

## படுக்கை அறைப் பாட்டு

1. சந்த்ர காந்த மண்டபத்தில் சயனஸ்தல மஞ்சத்தில்
சரசஉல்லாசம் செய்ய வாடி—மோக
ஞங்கி ஒருமுத்தம் தாடி.

2. அடியென் றதட்டிவெகு அதிகாரத் தோடழைக்க
ஆபரணங்கள் பூட்டி னீரோ?-கோடி
பொன்னைக் கொடுத் தென்னைக் கொண்டீரோ?

3. ஸ்வயபரி மளஸுகு மாரி ஸுகிர்தபுஜ
மரகத மாலையிட்டேண்டி;-யுத்த
முனையில் வந்துன்கைதொட் டேண்டி.

4. ப்ராண தாரமான ப்ரபுவேஉம்மைத் தான்இப்போ
பரிகாச மாகச் சொன்னேன் சுவாமி—இதைக்
கண்டிப் பார்தங்கள் மாமி.

5. பட்டத் தரசிநீ இஷ்டப் படிநடந்தால்
மாதுர்ய வசனம்மற வேண்டி;-உன்றன்
மாதா அறியஉரைப் பேண்டி.

## துண்டு துணுக்குகள்

ஆமச்சி ஊமச்சி
சந்தனக் கொட்டாங்கச்சி
நீயும் ஒரு செட்டிச்சி
நானும்ஒரு படையாச்சி
நீயும் நானும் ஒத்துப் போனு ஆச்சு.



குள்ளப் பொம்மனுட்டி கோடாலி பெத்தவ;
மறுபுள்ளே பெக்கவில்லே அரே பாவா!

## மாப்பிள்ளை வருகை

மாப்பிள்ளை வருகுது; மனிச்சத்தம் கேட்குது;
மாமியார் வீடு, திடின்புடின் என்குது.

## எந்தக் கதை சொல்ல?

பட்டகதை சோல்லுவேனுநான்
பொறந்த கதை சொல்லுவேனு நான் பாவி
மகராசனுக்கு நான் புகுந்தகதை சொல்லுவேனு?
அக்ராரம் தேடி நான்போய்க் குறுணை வாங்கிச்
சத்திரங்கள் தேடிநான் சமைச்சு
உண்ட தாயாருக்கு நான் பெத்தமகள்
குஞ்சழ கான கொத்துக் கட்டிப்
பல்குளிச்சான் பாட்டுப் பாடி
வைகுண்டம் அனுப்ப வா.

## கணவன் கேள்வியும் மனைவியின் பதிலும்

ஏத்தம் இறைக்கிறேன், இறைப் பெறைக்கிறேன்,
கொண்டாடி, குட்டி, கஞ்சி,
கிண்ணி வெளக்கறேன், சொம்பு வெளக்கறேன்;
கொண்டாறக் கொஞ்சம் நேரம்;
கூழு குடிக்கற நேரம் ஆச்சு;
கொண்டாடி குட்டி, கஞ்சி;
குந்தக் கூட நேரம் இல்லை;
கொட்டார மேண்டா அத்தாள்?
கொஞ்சம் பொறுத்துக்கோ, மச்சான்!

## மாப்பிள்ளையின் இடக்கு

பாக்கு வெத்தலை கேட்கிறார் அவர்,
போக்கணங் கெட்ட மாப்பிளை;
பசிக்கு துன்னு சோறு கேட்டால்
அடிக்க வர்றார் மாப்பிளை;
மடியைக் காட்டிப் பிச்சை கேட்டால்
தடியைக் காட்டுறார் மாப்பிளை;
அடிபணிந்து தெண்டன் இட்டால்
வெளியே போடி என்கிறார்.

## எப்ப வருவாரோ?

ஒருகட்டுக்கரும்பாம் புறங்கி-ஒண்ணாலே இரும்பாம்;
அந்தக் கட்டுக்கரும்பைப் பறங்கி-ஏத்துடா கப்பலிலே;
கப்பலும் பத்தாமே கனைகடல் ஓடமும் பத்தாமே
கப்பல் உடைக்கிற சின்னத் துரைமகன்
எப்பவரு வாரோ?
வந்தால் வராண்டி,-சிந்தாமணி
பார்க்க அல்லவடா;
ரெண்டுகட்டுக் கரும்பாம் பறங்கி ரெண்டாலே
இரும்பாம்.
[இப்படியே தொடர்ந்து வரும்.]

## வங்கணக்காரப் பயல்

மதுரைக் கோயில் திருநாளைக்கு
வாறேன் என்னியடி—அந்த
வங்கணக் காரப் பயலைக் கண்டால்
மாட்டேன் என்னியடி,

## விடை கேட்டல்

போகட்டா என்று பொற்கொடியே, நீகேட்கப்
போஎன்று சொல்லஎன் பூமனமும் கல்லாமோ?
ஆசைப் பசுங்கிளியே அயலூரின் நங்கணமே,
வாசமுள்ள பூமலரே, நீ, மாறிவந்தால் ஆகாதோ?

## துணை

(1)

நாலு லட்சம் பொண்கள் வெண்சாமரை வீச
வேதியர் குலமாம் இக்காலத்துப் பொண்கள்
ரெண்டு பொண்கள் கொண்டு போராளும்*
பொண்கள் துணை போனல்
ரெண்டு பங்கு வெச்சுத் தருவா
நான் கூடத் துணைபோனல்.

(2)

ஏறம்மா வண்டியிலே; ரோசாப்பூக் கொண்டையிலே;
நான் வாரேன் அண்டையிலே.

## தெம்மாங்கு

ஆத்தூரு வண்டி கட்டி அதமன்கோட்டைமாடுகட்டிச்
சேலத்துச் சாட்டை தீட்டிப்-பிள்ளைக் கிளியம்மா
சேர்த்து ஓட்டினன் ரங்கசாமி-போடுகிண்ணுக்கு!

---

(பாம்.) * போரா நாம்.

காடைக் கூடும் கக்கத்திலே கறுத்த மச்சான் பக்கத்திலே;
மாடப்புருக் குஞ்செடுக்கப்-பிள்ளைக் கிளியம்மா,
மைகளுண்டோ உன்னிடத்தில்?-போடுகிண்ணுக்கு.
மானத்திலே மீனிருக்க மதுரையிலே நான்இருக்க,
சேலத்திலே நீஇருக்கப்-பிள்ளைக்கிளியம்மா-நாம்
சேருவது எக்காலமோ-போடுகிண்ணுக்கு!

## விஞவிடை

ஒன்பது பொண்கள் கூடிச் சதுரங்கம் ஆடும் பொண்ணே
பஞ்சணை மெத்தையிலே பாதிரி பூத்ததுண்டோ?
பாதிரி பூத்ததுண்டு; பலபேர்கண் பட்டதில்லை;
கொல்லைவாழை தன்னில் குடமல்லிகை பூத்திருக்கு.

## நன்ஞனே பாட்டு

[ஆண் பெண் விவாதம்]

மரகதப் பிள்ளையாரே, மலர்ந்தசமு சாரியரே,
என்னை வைத்து ஆதரிக்க என்னென்ன வகுத்தறிவாய்?
உன்னை விடுவதில்லை; ஒருவர்முகம் பார்ப்பதில்லை;
என்னைவச்சு ஆதரிக்க என்னென்ன வகுத்தறிவாய்?
தேருபுரம் குன்றத்திலே தேருமுட்டி ஓரத்திலே
மாறுபடாச் சந்நிதியில் மயிலே உலாவுறது.
கூடி இருந்தஇடம், குமுக்குத்தாளம் போட்டஇடம்,
வாழைப்பழம் தின்னஇடம், பாழாய்க் கிடக்குதடி;
என்ன தருவேனுன்னு இளமயிலே, வாய்திறந்தாய்.
அன்ன மயிலாளே, என் ஆவி கேட்டால் தருவேண்டி,
அள்ளிஅள்ளிக் குடுத்தபணம் அத்தனையும் நானும்இந்த
வயிறு எரியுதடி, மானம் கெட்ட தட்டுவாணி!
என்னடா நீகொடுத்தாய்? ஏதும்கெட்ட
வெள்ளைப் பையா,
பொன்னுன என்மகளைப் புண்ணாக்கி விட்டாயடா.
ஆலம் விழுதுபோலே அந்தக்குட்டி தலைமயிரு;

தஞ்சாவூரு ராசாவுக்கு வெண்சாமரம் போடலாமே,
சேலையுன்னு தான்கேட்டுச் சிந்தைமகிழ்ந் தோடிவந்து
வேலப்பன் செட்டிகிட்டே கோபவர்ணச் சேலே
எடுத்தேன்.
திதிப்புச் செய்யும் சீனிமிட்டாய், பூரிஅல்வா
பொரிஉருண்டை,
பூராச் சமைச்ச கார வடையும்
பால்கோவா, பாதாம் அல்வா, பருப்பு துப்டா
பசுபகோடா,
ஆமவடையும் ஓமப்பொடியும் கமுகம் பாக்கும்
கப்பரை வெத்தலே,
காதில் குடுக்கும் சாதிப்பத்திரி, பச்சைக் கிராம்பு,
முத்துச் சுண்ணும்பு,
வாங்கியே தாரேன்; வந்துநீ சேரேன்.
ஆசைப்படுவானடி; அடிபடுவான் பிட்டத்திலே;
பேசப் பயப்படுவான்; பேய்த்துலுக்கன் சீமையிலே.
மாங்காய் பழமும் தேங்காய் போல
வாங்கியே தாரும்; வந்துநான் சேர்வேன்.
தட்ட ழிஞ்சார், தரம்இளேச்சார்; தாசிமகளோடு
சீரழிஞ்சார்;
ஏடழிஞ்சார், எழுத்தழிஞ்சார்; எழுத்திலுள்ள
சீரழிஞ்சார்;
பெட்டியை வித்தேன்; பேழையை வித்தேன்;
பொங்கித் தின்னும் சருவத்தை வித்தேன்;
பொண்டாட்டி கழுத்தில் இருந்த தாலியைப்
புடுங்கிக் கொண்டு கடையில் வித்தேன்.
சிப்பாய் வந்து புடிச்சிழுப்பான்; சிலேயை ரெண்டு
அடிஅடிப்பான்.
மாட்டேன் என்னுவே; வரிஞ்சு கட்டுவான்;
மண்ணுக் கூடையைச் சுமக்க வைப்பான்;
வேண்டாத பத்தினி, வம்புகள் எத்தினி?
சொல்லடி என் பத்தினி; நன்னுனே!

## பக்கத்து வீட்டுப் பெண்

காணுங் கெளுத்தியான் கருவாட்டுக்கு
ரெண்டு பக்கம் கண்ணு;
பக்கத்து வீட்டிலே சோக்கான பொண்ணு;
எங்க, மாமனுக்கு அதுமேலே கண்ணு.

## தேயிலைத் தோட்டப் பாட்டு

அயினுமலைச் சைனுக் கோப்பி*
அரும்பெடுக்காதே;-தங்கமே,
அரும்பெடுக்காதே!
மாமன் மகளே, மருக்கொழுந்தே,
மட்டம் பணியாதே,*-தங்கமே
மட்டம் பணியாதே.
கறுத்த பிள்ளை, கருங்குயிலே,
காம்பொடியாதே-தங்கமே,
காம்பொடியாதே.
மூத்த புள்ளை முழிபுரட்டி
மொட்டெடுக் காதே-தங்கமே,
மொட்டெடுக் காதே.
வத்தலை வதங்கலைத் தொத்தலைத் தூங்கலை
முத்தலை ஒடியாதே; - தங்கமே,
முத்தலை ஒடியாதே.
வளையல் கார வண்ணக் குயிலே.
வங்கி ஒடிச்சுப்போடு-தங்கமே
வங்கி ஒடிச்சுப் போடு.

---

* கோபி - காபி; யாழ்ப்பாணவழக்கு. முன்பு காபித் தோட்டமாய் இருந்தது இப்போது தேயிலைத் தோட்டமாயிற்று. இங்கே தேயிலையையே இப்படிச் சொல்கிறார்கள்.
* குறைக்காதே. தளிர்க்காமல் சடைந்திருக்கும் பகுதி. கொழுந்தெடுக்கும் போதே அதை ஒடித்து விடுவார்கள்.

கையிலைக் காதே-சந்தனம்
காசு கேட்காதே – தங்கமே,
காசு கேட்காதே.
முகத்தைப் பார்க்காதே – சந்தனம்
மோசம் செய்யாதே – தங்கமே,
மோசம் செய்யாதே.

## தங்கமே தங்கம்

வாசலிலே வாகைமரம்–சின்னத்தங்கமே; சாமிலிங்கமே,
கொட்டிலிலே கொன்னைமரம் – சின்னத்தங்கமே,
சாமிலிங்கமே,
கொடிகொடியா ஓடும்மரம் – தங்கமே தங்கம்
ஆத்திலே ஊத்து நோண்டி – தங்கமே தங்கம்
அவளும் நானும் பல்விளக்கத் – தங்கமே தங்கம்
ராத்திரிதான் சொன்ன சொல்லு – தங்கமே தங்கம்
ரம்பம் போட்டு அறுக்குதையா – தங்கமே தங்கம்
வாழையடி உன்கூந்தல் வயிரமடி பல்காவி-
தங்கமே தங்கம்
ஏழையடி நான்உனக்கு, இரங்கலையோ உன்மனசு,
–தங்கமே தங்கம்
ஒருத்திக்குநான் ஒருமகண்டி – தங்கமே தங்கம்
உன்னைநம்பி வந்தேனடி. தங்கமே தங்கம்.

## சங்கடம்

அரிசி இருக்குது, பருப்பிருக்குது, அடுப்புக்கில்லாத சங்கடம்;
காத்தடிக்குது; தூள்பரக்குது, கதவில்லாத சங்கடம்;
பொண்டாட்டிவந்து முன்னே நிற்கிருள்; புடைவை இல்லாத
சங்கடம்;
தாசி வந்து வாசலில் நிற்கிருள் காசில்லாத சங்கடம்.

## கள்ளக் காதலன் கேள்வி

பாகல் பழமே, பகல்முடிக்கும் சண்பகமே,
நீலக் கருங்குயிலே, நிற்கட்டுமா? போகட்டுமா?
நில்என்ருல் நிஷ்டுரம்; போஎன்ருல் பொல்லாப்பு;
பாலோ அடுப்புமேலே; பாலகனே தொட்டிலிலே;
அவங்களும் அண்டையிலே, ஆராரோ ஆரிரரோ!

## நாற்று நடவுப் பாட்டு

1. ஊருக்கு மேலண்டை உழுதுவைக்கும் புழுதிக் கொல்லே;
உன்கால் நடையைக் கண்டு நான்வருவேன் சாமத்திலே.
2. பச்சரிசி குத்திவச்சேன்; பயறுதனே வேகவச்சேன்;
தேங்காயும் துருவிவச்சுத் தேத்துறேண்டா உன்
உடம்பை.
3. அரிசி கடன்வாங்கி அரைமிளகாய் ரசம்வச்சு
இப்படிச் சோறுபோட்டால் எப்படிஆண்
புள்ளேயாவேன்!

## சோர நாயகன் கதை

[சோர நாயகனேடு அவள் பேசிக் கொண்டிருக்கிருள். கணவன் வரவே, குதிருக்குள் மறைகிருன், அவன் குழந்தையைஅடிக்கவே, அதுஉண்மையைச்சொல்கிறது.குதிரைச் சோதிக்கப் போகையில் அவன் கையைக் கடிக்கிருன்.]

**சோர நாயகன்:**

வங்காள மணி மூத்துப் பொம்பளே, – கொஞ்சம்
வடிசாதம் புடிசாதம் உண்டா?

**நாயகி:**

அப்போதே சொன்னுக்கா, ஆம்பளே,
முத்துச்சம்பா அரிசி ஆக்கிடுவேனே;

**குழந்தை:**

என்னே அடியாதே, பெத்தப்பா;
குதிருக்குள் இருக்கிறர் சித்தப்பா.

**நாயகி:**

குதிருக்குள் இருக்கற நாகப் பாம்பே,
கூசாமல் அவர்கையைக் கடியப்பா.

**கணவன்:**

பாம்பு கடிச்சுதடி பொம்பளே.

**நாயகி:**

பரிகாரி வீட்டுக்குப் போங்களே.

## மருமகன் அத்தை சம்வாதம்

மணக்கத்தை நெல்லுக்குத்திக்
கொழக்கட்டை சுட்டுத் தாரேன்;
வாடா மருமகனே!
கொழக்கட்டை தின்னல் தாகம் எடுக்கும்,
போபோ மாமி அத்தே!
தாகம் எடுத்தால் நீர்மோர் தாரேன்;
வாடா மருமகனே!
நீர்மோர் குடிச்சால் நித்திரை உண்டாகும்;*
போபோ மாமியத்தே!
நித்திரை உண்டானல் தட்டி எழுப்பறேன்,
வாடா மருமகனே!
தட்டி எழுப்பினல் உறக்கம் போகும்,
போபோ மாமியத்தே!
உறக்கம் போனல் கீரை விதைக்கலாம்,
வாடா மருமகனே!
கீரை விதைச்சால் வெள்ளாடு மேயும்
போபோ மாமியத்தே!

---

*(பாம்) பண்ணலாம்.

வெள்ளாடு மேஞ்சால் பால்கறக்கலாம்*
வாடா மருமகனே!
பாலைக் கறந்தால் பாவஞ்சித்திக்கும்
போபோ மாமியத்தே!
பாவஞ் சித்திச்சாக் காசிக்குப் போகலாம்
வாடா மருமகனே!
காசிக்குப் போனாலும் கர்மம் தொலையாது*
போபோ மாமியத்தே!

## நீயா பெண்டாட்டி?

மாமரத்துக்கும் பூமரத்துக்கும் மயிலைக் கண்ணாட்டி–
அந்த
மாமா என்றிற படவாவுக்கு நீயா பொண்டாட்டி?

## உழவுப் பாட்டு

மின்னாரே, மின்னாரே, [மின்னாரே, மின்னாரே,]
கம்மாளன் பொண்டாட்டி கண்ணாடி பார்க்கவந்தாள்.
என்நிலையும் குள்ளமுன்னாள்; எருதுரெண்டும் மட்டமுன்னாள்.
பொன்னான சாட்டைக்கோல் புடலம்பிடி என்றாளே.
வெள்ளியாலே சாட்டைக்கோல் வேட்டம்சிமிழ் என்றாளே.
அந்தக்
குள்ளப் பொண்ணுவெள்ளாட்டி–என் கொல்லைவழிவரலாமா?

## கூடை பின்னுதல்

ஓரேரிக் கரையாம், பொன்னேரி மடையாம்;
ஓங்கி வளர்ந்து பெருமையாய் அளந்து
சீவிச் செதுக்கிச் சிற்றுடைகள் நெகிழ்ந்து
அடியாமல் நில்லாமல் கூடைகள் பின்னி
கூறி நில்லுங்கள் கொறநாட்டுப் பொண்களா!

---

* (பாம்) வேலி அடைக்கலாம். * தீராது.

## துண்டு துணுக்குகள்

சனிக்கிழமை நாளும் இன்று;
சமைக்கருளாம் பொம்பளே;
தனக்கும் ஒருவாய் ஆப்பிடும்னு
குதிக்கிருனும் ஆம்பளே.



மானம் கெட்டவளே, மரியாதை கெட்டவளே,
ஈனம் கெட்டவளே, இடுப்பொடிஞ்சவளே!

## பூணுரம்

வீணுய் உடைந்தசட்டி வேணதுண்டு என்தலையில்; இந்தப் பூணுரம் பூண்ட புதுமையினைக் கண்டதில்லை.

## ஆசை

அரிசி வித்த விலையிலே – அவர் கெடந்த கெடையிலே
ரெண்டு பொண்டாட்டி ஆசை; – இழுபடுதே மீசை.

## இவர் அழகைப் பார்

பாரடி இவர் அழகைப் பாவையே, பூவையே,
சேவையே (பார்)

(சரணங்கள்)

1. தேவாதி தேவனே? தேவலோக குமாரனே?
தேவர்கள் போற்றிடும் தேவனே? சொல்லடி. (பார்)
2. கார்முகில் வண்ணனே? கரும்புவில் மாரனே?
கருத்துடனே பார்த்துக் கண்ணனே? சொல்லடி (பார்)
3. சொகுசுள்ள தீரனே? சுந்தரஒய் யாரனே?
சூட்டிய மலர்கேட்கும் சுகந்தனைச் சொல்லடி (பார்)

## நான் மறந்தேன்

(வண்டிக்காரன் பாட்டு.)

ஊருக்கு மேல்புறமா, ஏலேலோ மயிலன்னமே,
ஊசிப்பில்லாம் சாமைக்காடு, ஏலேலோ மயிலன்னமே,
கூலிக் கறுக்கப்போயி, ஏலேலோ மயிலன்னமே,
குஞ்சரத்தை நான் மறந்தேன், ஏலேலோ மயிலன்னமே,
மதுரைக்கு நேர்கிழக்கே, ஏலேலோ மயிலன்னமே
மாரியம்மன் தெப்பக்குளம், ஏலேலோ மயிலன்னமே
மஞ்சத்தண்ணி ஆடப் போயி, ஏலேலோ மயிலன்னமே
மயிலாளை நான்மறந்தேன், ஏலேலோ மயிலன்னமே.
ஐயா மலைமேலே, ஏலேலோ மயிலன்னமே
கொய்யாப் பழுத்திருக்கும், ஏலேலோ மயிலன்னமே!
கொய்யாப் பழம்பொறுக்கி, ஏலேலோ மயிலன்னமே,
குயிலாளை நான்மறந்தேன், ஏலேலோ மயிலன்னமே!

## வண்டிக்காரன் பாட்டு

வெள்ளை வெள்ளைச் சீலைக்காரி,
வெள்ளரிக்காய்க் கூடைக்காரி,
கோணல் மாணல் வெள்ளரிக்காய்-என் தங்கம் தில்லாலே
கொண்டுவாடி தின்னுபார்ப்போம்-என் தங்கம்
தில்லாலே
ரோட்டோரம் வீட்டுக்காரி – என் தங்கம் தில்லாலே
ரோசாப்பூச் சேலைக்காரி – என் தங்கம் தில்லாலே,
நான் வாரேன் சாமத்திலே,–என் தங்கம் தில்லாலே,
நாதாங்கி போட்டுடாதே,–என் தங்கம் தில்லாலே
காடைக் கூடும் கக்கத்திலே, –என் தங்கம் தில்லாலே.
கறுத்தமச்சான் பக்கத்திலே,–என் தங்கம் தில்லாலே,
மாடப்புருக் குஞ்செடுக்க,–என் தங்கம் தில்லாலே,
மைகள் உண்டோ உண் இடத்தில், என் தங்கம் தில்லாலே,
மானத்திலே மீன்இருக்க - என் தங்கம் தில்லாலே,
மதுரையிலே நான்இருக்க – என் தங்கம் தில்லாலே,

சேலத்திலே நீஇருக்க - என்தங்கம் தில்லாலே,
சேருவது எக்காலமோ? – என்தங்கம் தில்லாலே.



சின்னச்சின்ன வண்டிகட்டி – என்தங்கம் தில்லாலே,
செவலைமாடு ரெண்டும் பூட்டி – என்தங்கம் தில்லாலே,
வாழைக்காய்ப் பாரம்ஏத்தி – என்தங்கம் தில்லாதே,
வாராண்டி உன்புருஷன்; – என்தங்கம் தில்லாலே,
மாடுமோ செத்தல்மாடு – என்தங்கம் தில்லாலே,
மணலுமோ கும்பிமணல் – என்தங்கம் தில்லாலே,
மாடிழுக்க மாட்டாமல் – என்தங்கம் தில்லாதோ,
மாய்கிருண்டி உன்புருஷன் – என்தங்கம் தில்லாலே,
ஆத்தூரு வண்டி வாங்கி – என்தங்கம் தில்லாலோ,
அதமன் கோட்டை மாடுகட்டி – என்தங்கம் தில்லாலே,
சேலத்துச் சாட்டைதீட்டித் – என்தங்கம் தில்லாலே
சேர்த்து ஓட்டினுன் ரங்கசாமி போடுகிண்ணுக்கு.

## வாடும் காதலன்

கண்டஞ் செடிஉறங்கக் காட்டோரமாய்ப் போறபொண்ணே
புன்னைச் செடிஉறங்கப் பூப்பறிக்கப் போற பொண்ணே,
பூவிருந்து வாடுறதே புன்னைமரச் சோலையிலே;
நானிருந்து வாடுறேன் நாயகத்தைக் கணுமலே.
நாகமலை தோகைமலை நாலுதிக்கும் நாலுமலை
நாலும் மூணும் ஏழல்லவா? நாரத்தங்காய்ப் பிஞ்சல்லவா?
பிஞ்சிலே கூடினமாஞல் பிரியமனம் கூடாதோடி;
காயிலே கூடுமாஞல் கன்னிமனம் கூடாதோடி?

## கணவன் துயரம்

தங்கரத்தினமே, தாலி கட்டினேனே;
தாலி கட்டின மூணு நாத்துப் பாடை கட்டினேனே!

# மகளிர் கூற்று

## மாப்பிள்ளை

மாப்பிள்ளை மாப்பிள்ளை, மண்ணுங்கட்டித் தோப்பபளே.
மாப்பிள்ளை மாப்பிள்ளை மரக்காச் சட்டி;
இடுப்பிலே கயித்தைக் கட்டி
வடவண்டைத் தோப்பிலே அடிபட்ட நாயே,
கூப்பிட மாட்டேன்; சாப்பிடவா.

## எந்த மாப் பிள்ளை வேணும்

நெல்லுக் குத்தற பொண்ணே, – உனக்கு
எந்த மாப்பிள்ளை வேணும்?
சாலையிலே போகிற
சரிகை முண்டாசு மாப்பிள்ளை.

## தமயந்தி தூது அனுப்புதல்

(பல்லவி)

நீ உரைப்பாய் அன்னமே, நீ
நான் சொன்னதாகப்
போய் உரைப்பாய், அன்னமே!

(சரணங்கள்)

1. விதர்ப்ப தேசமே நாடி வீமராஜன் தவத்தால்
தமயந்தி என்னும் பெண்ணாய்த் தான்பிறந் திட்டே
னென்று (நீ)
2, நவகண்டம் ஆளும் அந்த நளபதி யைநினைந்து
உணவொன்றும் உண்ணமலே ஓங்கித் தவிக்கிரு
ளென்று (நீ)
3. அன்னம் ஆகாரம் நித்ரை அனைத்தையும் தானிழந்து
மாரன்எய்யும் கணையால் வாதைப்படு கிருளென்று (நீ)

## ஆண்டாள் நீராட்டு

1. மங்கள மேஜய மங்கள மேசுப
ரங்க மன்னருடை தேவி,
சங்கராந்தியைக் கோரி-ஆண்டாள்
சவரித் திருமஞ்சனம் பாரீர்.
தங்கப்பல்லாக்கினில் தகத கென்று ஜொலிக்க
மங்கை மகிழ்ந்து வராள், பாரீர், (மங்கள)
2. சங்கீத வாத்யம் முழங்க – ஆண்டாள்
சகல ஆபரணம் துலங்க
மங்கை மகிழ்ந்துமே அங்கம் குளிர்ந்துமே
மார்கழி நீராடி வந்தாள். (மங்கள)
3. ஆசையுடன் மகிழ்ந்து – ஆண்டாள்
ஆழ்வார்கோவிலுக்குள் வந்து – தன்
தந்தையை எதிர்பார்த்து
உகந்து கனுப் பொடியும் வைத்தாள். (மங்கள)

## தொட வேண்டாம்

வேலிமேல் கத்தாழை; வேடரெல்லாம் என்பொறப்பு – இந்த
வேடருக்கு வந்தவள் என் விரலேயும் தொட வேண்டாம்;
கள்ளிமேல் கத்தாழை [காடு நிறைய உண்டு.]
கள்ள ரெல்லாம் என்பொறப்பு – இந்தக்
கள்ளனுக்கு வந்தவள் என்
கையையும் தொடவேண்டாம்.

## சற்குருஸ்வாமி ஊஞ்சல்

1. சற்குருஸ்வாமிமேல் ஊஞ்சல் பாடச்
சரஸ்வதியும் கணபதியும் காப்ப தாமே;
அனுதினமும் என்மனத்தில் அமர்ந்து வாழ
அகோபலரும் லக்ஷ்மியும் அனுக்ரக மர்கச்
சித்ரூப மானவர்மேல் ஊஞ்சல் பாட

ஜெகரகித மானவரே, போற்றி போற்றி.
ஜனனபயம் மாற்றினவரே, ஆடி ரூஞ்சல்.

2, மாயை யொடும் அவித்தைமகா மேருவாக,
மண்டலங்கள் ஏழுமொரு பந்தலாக,
உபநிஷத் நான்கும்நாற் கால்களாக,
ஓங்கார மென்றபஃல் வத்தி யாசத்
திரமூன்று குணங்களும் விட்ட மாகச்
சதுர்வேதங் களும்நாலு சங்கிலியாகச்
சமதமாதி யாறும் பலகையாக
[சற்குணங்கள் பாவையுமே பூஞ் சராகக்]
கோசமற் றவரென்போர் கொடுங்கை வீசக்
குணரகித மானவரே, ஆடிர் ஊஞ்சல்.

3. அகார உகார மகாரங்கள் மேல்கட்டாக
ஐம்பத்தோ ரக்ஷரம்பூந் தொடர் களாக
நாம ரூப ரகிதமென்னும் நடனமாக
ஆதார மாம்வாழை கமுகு தாழப்
பதங்களென்னும் பதினொரு பக்தி மாலையாகப்
பவசாகரம் வற்றடித்தவரே, ஆடிர் ஊஞ்சல்.

4. பலச்ருதி வாக்யம் நாலுதீப மாகப்
பிரதிபலிக்கும் பதங்களெட்டும் வாத்ய மாக,
வர்ணமெனும் சமூகமெல்லாம் மணுக்களாக,
அகமஸ்மிஎனும் பெண்ணுடனே ஆடிர் ஊஞ்சல்;
பரமதயாளு ஆனவரே, ஆடிர் ஊஞ்சல்.

## கோதை கதவு திறக்கும் பாட்டு

1. பூந்துள விற்பிறந்த ஸ்ரீகோதை நாயகி
பொற்கத வைத்திற பெண்ணே! – மிக
நற்கனி இந்தாஎன் கண்ணே!

2. பூங்கனி இந்தாவென்று ஈங்கிற வினில்வந்து
பொற்கத வைத்தொட்ட தாரடி? – இங்கே
நிற்கிற வரைவந்து பாரடி.

3. ஆரென்று பாராமல் அதட்டிப்பேசாதே, பெண்ணே,
அருளும் ஸ்ரீ ரங்கமன்னன் நானடி; – இந்த
மருளும் உனக்குவந்ததேனடி?

4. தேனூறு கூந்தலார் சேயிழை கள்வலையில்
சிக்கின சிக்கெல்லாம் விட்டதோ? – அவர்கள்
சொக்குப் பொடியும் அற்று விட்டதோ?

5. ஆச்சர்ய மாகச்சொன்னீர்; உம்மைப்போல்
எங்குமுண்டோ?
அதரம்புண் ணானதென்ன சொல்லும்; – இந்த
ஆட்சேபத் துக்குச்சொல்லி வெல்லும்.

6. சீகப் பிறைநுதலி, கேளடி, கோகுலத்தில்
தீங்குழல் ஊதிவந் தேனடி; – அது
செய்யவே வந்திடும்புண் தானடி.

7. உம்முடைய மார்பினில் எவளுடைக் கண்மையோ
ஒட்டி இருப்பதைப் பாருமே; – இதில்
உண்டான சந்தேகத்தைத் தீருமே.

8. சித்தப் பிரமையுள்ளவள் நீயல்லால் வேறுண்டோ?
ஸ்ரீவத்ஸம் எனும்மறு தானே, – அதன்
செய்தி உனக்குமுன்சொன் னேனே.

9. மாதவரே, உம்முடைய மார்பினில் இருக்கும் முந்நூல்
மஞ்சள் ஆவதென்ன ஓதும்; – இது
மாத்திரம் சொல்லும் போதும்; போதும்.

10. பொன்னாலே முந்நூல் செய்து அணிந்து கொண்டதைப்
பூவையே, மஞ்சளென்று சொன்னையே; – இந்தப்
புவியோரென் சொல்லுவார் என்னையே?

11. அரையில் உடுத்தவஸ்த்ரம் அத்தனையும் மஞ்சள்
ஆவதென்ன சொல்லும் சுவாமி – நீர்
அதனாலல் லவோமிக்க காமி?

12. என்னரையில் உடுத்த வஸ்த்ரம் பீதாம்பரமென்
றெல்லோரும் சொல்லுவதை எண்ணுவாய்; – ஏதுக்
இத்தனை அதிகாரம் பண்ணுவாய்?

13. கேட்டதுக் கெல்லாம் சொன்னீர்; பெண்புத்தியை மிரட்டக்
கெட்டிக் காரரன்றோ நீரே?-இன்று
கேட்டல்லவோ அறிந்தேன் நேரே?

14. நேருத்தரம்சொன்னால் சென்மப் பகைவிளையும்;
நிச்சயம் இன்னம் கொள்ள வில்லையே! – இது
நிஜவார்த் தைக்குக்காலம் இல்லையே!

15. உள்ளத்தைச் சொன்னதால் உடம்பெரிச்சல் உண்டோ?
ஓகோ இதென்ன கோபம் சுவாமி? – திரு
வுள்ளம் குளிரவேணும் சுவாமி.

16. வாய்புளித் ததோமாங்காய் புளித்த தோஎன்று
மரியாதை இல்லாமல் பேசுறாய்; –வேறு
மாதரைக் காணேனென்றால் ஏசுறாய்'

17. விஸ்தாரம் படிக்கிறீர்! காணாத இடத்தினில்
மேவினால் அறிவேனோ சுவாமி? – ஜால
வித்தையை அறிவேனோ சுவாமி?

18. பொறுத்துப் பொறுத்துப்பார்த்தேன்; சொன்னதே சொல்கின்றாய்;
பொறுக்கவொன் ணாதினி;நீயே – நான்
போகிறேன் தனித்திருப் பாயே,

19. இத்தனை சொன்னதும் உபசார மாகக் கொண்டு
என்மேல் கிருபை செய்வீர், சுவாமி,–என்
றியம்பவே மகிழ்ந்தாரே, சுவாமி.

20. சேயிழை உன்னையல்லால் மற்றொருத் தியைக்காணேன்;
நிந்தனை வார்த்தைகள் பேசுறாய்; – முழுத்
தந்திர மாகச்சொல்லி வீசுறாய்.

21. தந்திரம் இல்லை;எங்கும் போக வில்லை என்றால்
தாமதிக்கக் காரணம் யாதோ? – நான்
சரிவழக்குச் சொன்னால் வாதோ?

22. வாதில்லை; வானவரும் அசுரரும் சண்டை செய்தார்;
வழக்குத்தீர்க்கப் போனேன், பெண்ணே, – இது
மாத்திரந்தான் என்றன் கண்ணே!

23. முடிந்த குடுமிஎல்லாம் அவிழ்ந்து புரள்வதென்ன?
முழுப்பொய்யைச் சொல்லா தேயும் நேமா, – இந்த
மோசம் செய்யமன சாமா?

24. மோசமா ரடி செய்தார்? ஓடிவந் ததனாலே
முடிமயிர் அவிழ்ந்தது மாதே, – மிக
முரண்டுபண் ணாதேஇப் போதே.

## வாக்கு வாதம்

வண்டியிலே வாழைமரம்; கொண்டையிலே தாழம்பூ;
கொண்டையைக் குலைச் சுவிட்டான்; தாழம்பூ வாசம்
போச்சே!
மல்லிகை பொண்பொறந்து மங்கைகுறை ஆரறிவார்?
வண்டியிலே போறவரே, வயசுமெத்தக் சென்றவரே,
மெத்தக் கழண்டவரே, மேல்விலாசம் ஏதுக்கையா?



வெள்ளைக் கடுக்கன்போட்டு வீதியிலே போற பையா,
வீசி நடக்காதேடா; வீசிடுவேன் கன்னத்திலே.
சந்தனப் பொட்டுவச்சுத் சாஞ்சுண்டு போறபையா,
சாஞ்சு நடக்காதேடா; சாத்திடுவேன் கன்னத்திலே.
கள்ள வெள்ளி மோதிரம் கடுக்கன்வெள்ளி, மேல்முருகு,
சன்னல் வச்ச மோதிரம், கண்ணைப் பறிக்குதடா!



நீல வளை போட்டு நெல்அறுக்கப் போற பொண்ணே,
நின்னு பேசாதடி; விட்டிடுவேன் கன்னத்திலே.
கருகமணி வளைபோட்டுக் கதிராறுக்குப் போறபொண்ணே,
காலையிலே பேசாதடி, கருங்குயிலே, சும்மா போடி.

## சம்பந்தி ஓடம்

சம்பந்தி மகிமைதன்னை எவர் அறியக் கூடும்?
சிம்மம்போல் கர்ஜிப்பாள்; திக்காரம் செய்திடுவாள்.
வர்மமான மனசுள்ளாள் – சம்பந்தி.
வழக்குக்குக் கூசமாட்டாள் – சம்பந்தி.

(முருக)

அம்மாளுடை மகிமையைச் சொல்லிடக் கேளும்:
அவனிதனிலே இந்த அதிசயத்தைக் கூறும்,
தர்மநிலை தப்பாமல், பொழுது விடிந்தால்
தாம்பூல சர்வணங்கள் பண்ணியே பின்பு
பல்தேய்க்கக் கூஜாவில் தீர்த்தமதைக் கொண்டு
பக்கமதில் பர்த்தாவும் நிற்கவே வேணும்.
சொல்தவருமலே டிஃபனோடு காபி
சொகுசாக மேஜையில் வைக்கவே வேணும்,
கல்கண்டு, நெய்சேர்ந்த அலவாக் கிளறிக்
கால்மணிக் குள்ளாகத் தருகவே வேணும்.
மல்கோவா, ரஸமான கனிகளைச் சீவி
மரியாதை யாகவே கையேலே தரணும்.
பத்துமணி அடிச்சவுடன் வெந்நீர் விளாவிப்
பாங்கான புடைவையைத் துவைக்கவே வேணும்.
நெத்திக்கு இட்டபின் பிற்பாடு ஓடி
ரெட்டைஇலை போட்டுப் பரிமாற வேணும்.
கையலம்ப ஜலம்குடுத்து வெத்தலை மடிச்சுக்
கனிவாய் சிவந்திடக் குடுத்திட வேணும்.
தூங்கி எழுந்தவுடன் டீகுடுக்க வேணும்.
சீக்கிரமாய் ராத்திரிக்குத் தளிகை பண்ண வேணும்.
போஜனங்கள் செய்து எழுந்தபிற் பாடு
போட்டு மஞ்சங்களைத் தான்விரிக்க வேணும்.
பள்ளியறை ஜோடிச்சுப் படுக்கை விரிச்சுப்

பிரியப்பட்ட மனுஷாளைக் கொண்டுவந்து சேர்த்து
உல்லாச மாகவே சொன்னபடி கேட்டால்
ஒரு நாளைக்குப் பர்த்தா மனம்போல நடப்பாள்.
ஏலேலோ சம்பந்தி ஏலேலோ!

## கணவனைத் தேடுதல்

கருங்கல் லாலே கட்டடம் கட்டிக்
கறுத்த பையனை உள்ளே தள்ளி
வேணுமா, வேணுமா? கேளுங்களேன்;
வேறே ஒருத்தரைத் தேடிக்கலாம்;
செங்கல்லாலே கட்டடம் கட்டிச்
செவத்த பையனை உள்ளே தள்ளி
வேணுமா, வேணுமா? கேளுங்களேன்;
வேறே ஒருத்தரைத் தேடிக்கலாம்.



கடலோ ரத்திலே கல்லுத் தூணு;
கணவன் வச்சது பொனனுத் தூணு;
கணவன் வந்தாலும் பாத்துக்காலம்;
கண்ணுக்கு ஏத்தவரைத் தேடிக்கலாம்.
புருவத் தோரப் பூவரசந் தூணு;-நம்
புருஷன் வச்சது பொன்னுத் தூணு;
புருஷன் வந்தாலும் பாத்துக்கலாம்; - நம்ம
புத்திக்கு ஏத்தவரைத் தேடிக்கலாம்.

## சீரழிந்து போனவள்

**தாய்:** ஏழுமலைதாண்டி இஞ்திவெட்டப் போனமகள்
கண்கள் சிவந்ததென்ன? கடுங்கோபம் ஆனதென்ன?
**பெண்:** ஈரல் எரியுதம்மா, இருதுடையும் நோகுதம்மா;
உன்செல்லப் புள்ளையாலே சீரழிஞ்சு போனேனம்மா.

**தாய்:** செல்லப் புள்ளேயும்நீ சிவந்துவரும் சூரியன்நீ;
செண்பகப் பூவும்நீயே, மருமகன் ஆனுயோடா?

**பிள்ளை:** ஆற்ருதே, தூற்ருதே, அம்மா, அம்பலத்தில்
ஆக்காதே, அம்மா,
நான் இட்ட மாங்கிலியத்தை ஆரிடப் போராரம்மா?

**தாய்:** உன்னேவெட்டி வெயிலில் வைக்க குத்திக் குழியில்
வைக்க
உன்தேரு தெருவில்வர,என்னேக்குப் பார்ப்பேனே?



நெறைஞ்ச குளத்திலே நீராடும் பொண்டுகளா:
சமைஞ்ச குமரிகளா, சமத்தன்வரக் கண்டீங்களா?
உன்மகனே ஆருகண்டார்? ஊர்மகனே
ஆருகண்டார்?
மாருருவிப் போனுண்டி, மையல் மயக்கத்திலே.
பாப்பாரு மண்டபமாம்; பாழடைஞ்ச சத்திரமாம்;
சொக்கட்டான் திரிவிளக்கு, சொன்னேன்
அடையாளம்.
கத்தாழை மேடேறிக் கத்தக்களி நான்பாட
வழியே போற உன்மகனுக்கு வலுச்சண்டை
பார்க்கணுமா?

## மாமியார் கோள்

(1)

கொள்ளே வறுத்து - மணிதில்லாலே
அடிமடியிலே கட்டிக்கிருள் – மணிதில்லாலே
மாமியார் கண்டுக்கிரு – மணிதில்லாலே
மகனேடே சொல்லிவிட்டாள் – மணிதில்லாலே
மாடுகட்டும் தும்பாலே - மணிதில்லாலே
மாய்கிருனும் எஞ்சாமி - மணிதில்லாலே
கன்றுகட்டும் தும்பாலே - மணிதில்லாலே
காலே அணையுருனும் - மணிதில்லாலே.

(2)

**மாமியார்:** விழியால் விரட்டியரே, விசுவருட தேவியரே,
தண்ணிக்குப் போனஇடம், தாமசங்கள்
என்ன?

**மருமகள்:** அரைதிரண்ட காவேரி, கரைதிரண்டு வந்தது;
அதைத்தான் பார்த்துவந்தேன்; ஆம்படையான்
தாயாரே!

**மருமகள்:**
**தன்கணவனிடம்:** சோமன் அழகா, கருப்பட்டிக் காரடா,
உன் அம்மை ஒருவார்த்தை மனமறுகச்
சொன்னாளே.

**கணவன்:** கடுகு சிறுத்தவளைக் காசாம்பூ மேனியளை
இடைசிறுத்த குஞ்சரத்தை என்னசொன்னாய்
அம்மா நீ?

**தாய்:** பீத்தல் முறமே, பெருக்கவச்ச வார்கோலே,
ஆத்தங் கரையில் அம்மைஎன் றழையாதே.

## மருந்து வைத்தவள்

கங்காணிக் கட்டைமேலே - தில்லாலே கண்ணு,
கைஇரண்டும் சட்டமாகுதே, - தன்னானே கண்ணு,
பெரிய குதிரை மேலே - தில்லாலே கண்ணு,
பேறு போடப் போறதெப்போ? - தன்னானே கண்ணு,
இருளுகுப்பன் தலையை ஆத்தி, - தில்லாலே கண்ணு,
இருக்கமுடி கொள்ளலையே; - தன்னானே கண்ணு,
கண்ணை கொப்பச் சப்பைக் காடு - தில்லாலே கண்ணு,
நமக்குக்
கலந்து கொடுப் பவர்க்குப் பாறை - தன்னானே கண்ணு
எலுமிச்சங் கனியைப் போலே – தில்லாலே கண்ணு,
இருவருக்கும் ஒருவயசு - தன்னானே கண்ணு,
அஞ்சு மணிக்குள்ளே – தில்லாலே கண்ணு,

கூவுதடி அந்தச் சேவல் - தன்னானே கண்ணு,
அதனைக் கழுத்தறுத்து, - தில்லாலே கண்ணு,
ஊர்க்குருவிப் பிச்சை எடுத்து, - தன்னானே கண்ணு
உடும்புக் கழுத்தறுத்து, - தில்லாலே கண்ணு,
காடைப் பிச்சை எடுத்து - தன்னானே கண்ணு,
ஒருசேரு எண்ணெய் வாங்கி, - தில்லாலே கண்ணு,
உருக்கிட்டாளே கைம்மருந்து, - தன்னானே கண்ணு,
அமாவாசை ஒருபொழுது - தில்லாலே கண்ணு,
வாருமையா என்னிடம் - தன்னானே கண்ணு,
சாதமையா, சாப்பிடையா - தில்லாலே கண்ணு,
ஒருபுடி சாதமையா - தன்னானே கண்ணு,
தாயும் இல்லை, தந்தைஇல்லை, - தில்லாலே கண்ணு,
பிரியமாய்க் குடுத்ததில்லை - தன்னானே கண்ணு:
தாயின் பிரியமோ? - தில்லாலே கண்ணு,
பொண்சாதி பிரியமோ? - தன்னானே கண்ணு,
சாப்பிட்ட சம்பிரமும் - தில்லாலே கண்ணு,
ஏறிடுச்சே கைம்மருந்து - தன்னானே கண்ணு,
நிதானே எனக்கு எல்லாம், - தில்லாலே கண்ணு,
பொண்சாதி வந்தாளானால் - தன்னானே கண்ணு,
கத்திக்கிரை செய்திடுவேன்; - தில்லாலே கண்ணு,
கரிகிளறும் குண்டுசட்டி போலே - தன்னானே கண்ணு,
வயிறு பெருத்துப் போச்சு; - தில்லாலே கண்ணு
உடலும் சிறுத்துப் போச்சு; - தன்னானே கண்ணு,
எழுந்திரிச்சுப் போவுமையா, - தில்லாலே கண்ணு,
இங்கே என்ன வேலை உனக்கு? - தன்னானே கண்ணு,
ஏழுந்திரிச்சுப் போக மாட்டாமே - தில்லாலே கண்ணு,
சுத்துக்கா விடுகிறானே, - தன்னானே கண்ணு,
அப்படி இருந்து இறந்திட்டானே! - தில்லாலே கண்ணு,
பொண்சாமி கதறி அழுது, - தன்னானே கண்ணு,
போகிறதைப் பார்த்தல்லவோ - தில்லாலே கண்ணு,
கதவைத்தான் சாத்திட்டாளே! - தன்னானே கண்ணு.

## ஆரோ ஒரு பையன்

அத்தை மகனுக்குன்னு அறையிலே பொண்பொறந்தேன்;
ஆரோ ஒரு பையனுக்கு - ஏலங்குறுவ, மயிலைக் குறுவை,
அம்மாள் கோலம் இட்டு வாறேன்.
பொட்டியிலே பொண்பொறந்தேன்; புருஷனுக்கே
என்றிருந்தேன்;
ஆரோஒரு பையனுக்கு - அம்மான் கோலம் இட்டேன்!
கோட்டையிலே கொடிபறக்கக் - கொடியைச் சுத்தி நான்
பொறக்கச்
சீமையிலே பொண் இருக்கச் சமயம் பார்த்து வந்தாரே.

## நலங்கு

காக்கைக்கு நீள மூக்கு
காப்பிரிக்குச் சப்பை மூக்கு
கழுதைக்கு வெள்ளி மூக்கு
காவேரிக்கு ஊளைமூக்கு
ஒட்டகைக்குக் கல்யாணம்
ஓடி வாரும் கழுதைகளே,
சட்ட மாகப் பாட்டுப்பாடும்;
சம்மானம் வாங்கித் தாரேன்,
ஒஹோ ரூபம் மாப்பிளை பெண்
ஓஹோ என்று கழுதை பாட
ஒகோ தீவளி கழுதைக் கென்று
ஓங்கி ஸபாஷ் கிடைத்ததுவே?

## நலங்கு

நலங்கிட வாரும்ஸ்ரீ நந்தகு மாரா!
ராதா மனோஹரா, நவநீத சோரா,
ஸ்ரீருக்மி ணீசத்ய பாமா சரசலோலா,
ஸ்ரீராஜ கோபாலா, மகாராஜா துரையே! (நலங்கிட)

பத்துக் கஜத்திலே பட்டுப்பா வாடை,
பனாரஸ் துப்பட்டா, ரவிக்கை மேலாடை,
அவளுக்கு ஏத்ததோர் ஆதார மேடை,
இருப்பாளே நாலஞ்சு தாதிமா ரோடே. (நலங்கிட)

வரகநட் சத்திரத்தில் அட்டிகை, ஓலை,
வயிரபுல் லாக்கு, சரமுத்துமாலை,
நாகரிக மான தொரு கைக்காப்புத் தோடா,
நானு விதங்களும் நீர்வாங்கித் தாரும். (நலங்கிட)

## நலங்குப் பாட்டு

அலோமை டியர், மைடியர், அன்புடனே வெல்கம் ஹியர்;
நலங்கிடுவோம்; ஸிட் டௌன் ஹியர்
நாம் இருவரும் வித்ஹியர். (அலோ)
எழுந்து வாரும் மைலவர்;
இனிமேல் தாமஸம் டு அவர்,
கழிந்து போச்சுது ஒன்ஹவர்
கம், மைடியர் டு அவர். (அலோ)
முத்துக் கிருஷ்ணன் நோட் பாட
மோகினி எல்லாம் முன்கூட
ஒத்தின புஷ்பம் செண்டாட
ஒய்டிலே இன்னங் கூட?

## நலங்கு

1. ஸ்ரீகிருஷ்ண பாதமே - தந்தருள் செய்குவீர்;
சீராய் நலங்கு இடுகிறேன்; (ஸ்ரீ)
2. நீரஜ பவார்ச்சித நிருபம சுந்தரா,
நேர்த்தியாய் நலங்கிடுவேன், நித்யகல்யாண! (ஸ்ரீ)
3. பச்சை மஞ்சள் பூசுவேன்; பாங்குடன் யானுமே
பாத கமலம்தர வேணும். (ஸ்ரீ)
4. கச்சித மாகவே கமலப்பொற் பாதத்தில்
காதலால் நலங்கிடுகிறேன்;
கடைக்கண்ணால் பாரும். (ஸ்ரீ)

## நலங்கு (வேறு)

நவமோகன முரளீ தரனே,
நலங்கிட நீர்வாரும், நாதன்; (நலங்கிட)
புவனேசுவரா, பூரணி சுந்தரா;
புராரி வந்தித புராண புருஷா! (நலங்கிட)
கருணு கரவரதா, வந்தருள்
தருவாய்! தருணம் துரையே,
சரணு கத சரீரமனோரத
சாரஸ நயனு சியாமள வருண (நலங்கிட)

## நலங்கிட அழைத்தல்

(பல்லவி)

நலங்கிட வாருங்களிப்போ - நங்கைய ரெல்லாம் (ந)

சரணங்கள்.

நால்வகை வாசஞ்சேர்ந்த நலமான சந்தனத்தை
நாகமீது தூங்குவோனுக்கும் லட்சுமி தேவிக்கும் (ந)
அல்லல்கள் மிகப்புரிந்த அசுரர்கள் சிரமரிந்த
வல்லராம மூர்த்திக்கும் நல்ல சீதா தேவிக்கும் (ந)
பாலும் தயிரையு முண்ணப் பாற்கடல் வெண்ணெய்
உண்ணப்
பாலனும் கோபாலனுக்கும் ருக்மிணி தேவிக்கும் (ந)

## நலங்குப் பாட்டு

[யாழ்ப்பாணத்தில் பாடுவது]

கல்லுக் கட்டில் ஏறி - எங்கண்ணண்
கணக்குப் படிக்கையிலே
காணும் பறைச்சி மகள்.
வந்திருந்தாள் ஊஞ்சலுக்கு
ஊஞ்ச லுக்குக் கீழே

ஒண்டியிருந்தாள் தேவடியாள்.
மாமா சரண முன்னு
மடிமேலே கைபோட்டார்.
ஈதென்ன பாவமுன்னு - எங்கண்ணன்
எடுத்திட்டார் மாங்கலியம்.

## நலங்குப் பாட்டு

நலங்கிட வேவந்த நாதனைக் காணமல்
நான்தேடித் திரிகின்றேன்; - சகிமாரே,
சந்தனம் இடவந்த சற்குண சீலன்மேல்
சகித்துக் கொண்டீர்களோ? – சகிமாரே,
குங்குமம் இடவந்த குணமுள்ள சீலன்மேல்
கோபிச்சுக் கொண்டீர்களோ - சசிமாரே,
பன்னீர் தெளிக்க வந்த பாலனைக் காணமல்
தேடித் திரிகின்றேன்; - சகிமாரே!

## நலங்குப் பாட்டு (வேறு)

விந்தையுடன் நலங்கிடச் சிந்தைமகிழ்ந் தேவருவீர்;
மந்த ஹாஸ மாகப்பதம் தருவீரே.
சிந்தைக் குறை தீர்க்கவந்த சிவனுடைய பால னெனச்
சிந்து தனில் வந்துதித்த குமரேசா,
வந்தசுரர் தம்மை வென்னு வாதுமொழி யைப்பு கன்று
வள்ளியை மணம் புணர்ந்த வடிவேலா!



நாகரிக நலங்கிட நாதா, வாரும்;
நாதா, வாரும்; பதம் சீராய்த் தாரும்.



நலங்கிட வாரும் வேகமே;
நாகரிகம் உள்ள நேசனே;

1. நெடுநாளாய் உன்மை வருந்தி; இருந்தேன்.
எல்லாரும் கூடிகள் ஸெட்டுச்* செய்திப்போ
மாரேஜீ முடிச்சு வச்சார்.

2. நீர் அப்டுடேட் ஃபாஷனாய் இருக்க வேணும்;
இங்கிலீஷ் எப்போதும் பேச வேணும்;
ஈவினிங் மோட்டாரில் ஏறிக் கொண்டு
நாமும் பீச்சுக்குப் போகவேணும்.

3. டவுனில் மாடிவீடு வாங்க வேணும்;
முழுதும் எலக்ட்ரிக் ஃபிட்டிங் காகவே,
ஹாலில் ஸோஃபா டேபிள் ஸ்ப்ரிங் கட்டில் களுடனே
பில்லியர்ட்ஸ் டேபிள் வேணும்

4. ஹிண்டு, டெய்லி. எக்ஸ்ட்ப்ரஸ், மெட்ராஸ் மெயில்,
டைம்ஸ் ஆஃப் இந்தியா, அமிர்ந்த பஜார்,
பேபர்ஸை நாமும் வரவழைச்சு
பலேஷோக் காக வாசிக்க வேணும்.

5. ஆனந்த பவானும் செல்ல வேணும்.
ஸ்பெஷல் டிஃபன் நாமும் பண்ணா வேணும்,
ராயல் தியேட்டர்போய் மாட்டினி ஃபர்மான்ஸ்
பஸ்டுக் கிளாஸிலே பார்க்க வேணும்.

6. எப்போதும் என்சொல்லைக் கேட்க வேணும்.
பேரெண்ட்ஸ் வேறாய் இருக்க வேணும்.
எப்போதும் அவர்கள் நம்மைப் பத்தி
ஒண்ணும் பேசாயல் இருக்க வேணும்.

7. என்னுடைய ஐடியல் சொல்லி விட்டேன்;
தகுந்த அரேஞ்ஜ்மெண்ட் செய்ய வேணும்.
நாழிகை ஆயிற்றுப் பாதந் தாரும்.
மைடியர் பிராண நாதரே!



1. மனசுக் கிசைந்த என்றன் மானே, மரகதமே,
மங்களஎங்கியே வருவாய் நலங்கிடவே.
பைங்கிளியாளே, வருவாய். (மனசு)

2. பாய்ஸுகள் யாவரும் பாலாடக் * காத்திருக்கார்;
பைங்கிளியாளே வருவாய். - நலங்கிடவே
கண்மணியாளே, வருவாய். (மனசு)

3. பேப்பர்வா சிக்கவேணும்;ஃபிரெண்டுகள் காத்திருக்கார்
ப்ரேமை யுடனே வருவாய்; - நலங்கிடவே
கோமளாங்கியே வருவாய். (மனசு)

4. நாவல்வா சிக்கவேணும், நண்பர்கள் காத்திருக்கார்
நாயகி யாளே, வருவாய், - நலங்கிடவே
மோகனுங்கியே வருவாய். (மனசு)

5. ஃபுட்பாலும் ஆடவேணும்; உறுதியாகப் போகவேணும்;
அட்டிசெய்யாமல் வருவாய் - நலங்கிடவே
சொர்ணக்கிளியே வருவாய். (மனசு)

## பத்தியம்

நாடாளும் மன்னனுக்கு, ராஜகுமாரனுக்கு - நல்ல
நாயகியாய் வேணுமுன்னு சுத்திவந்தோம்;
ஊரெங்கும் சுத்தினோம்; உத்தமியாய் வேணு மின்னு
உலகமெல்லாம் நாங்கள் பார்த்து வந்தோம்.
பதிவிரதையாய் வேணுமுன்னு பார்த்துப்
பொறுக்கினோம்;
பாலக்காடு முதலானதும் பார்த்து வந்தோம்.
சண்டை புடிக்காத சாந்தகுணம் வேணு முன்னு
தஞ்சாவூர் முதலானதும் பார்த்து வந்தோம்.

*Ball

கோபங்கள் செய்யாத குணசாலி வேணுமுன்னு
 கும்பகோணம் முதலானதும் பார்த்து வந்தோம்;
படங்கள்முதல் கோக்கற பாஞ்சாலி வேணுமுன்னு
 பட்டணம் முதலானதும் பார்த்து வந்தோம்;
ரவாபதார்த்தங்களும் நேர்த்தியாய்ச் செய்கிற
 லக்ஷ்மியாய் வேணுமுன்னு பார்த்து வந்தோம்;
மாமியார் மாமனர் மச்சினன் கொழுந்தனுக்கு
 மரியாதைகள் செய்கிறவள் வேணு முன்னு
அருண உதயந்தனில் ஹரிஹரி என்க வேணும்.
 ஹரிமேலே கீர்த்தனங்கள் பாடவேணும்.
பரபரவென் றெழுந்திருந்து பல்லுமுதல் தேச்சுக்
 கொண்டு
 பாத்ர சுத்தி முதலானதும் செய்ய வேணும்.
விடியஜா மத்திற்கெழுந்து தயிரைநன் ருக்கடைய
 வேணும்.
 சட்டமாக எங்கும் மொழுக வேணும்.
கோலம் முதலானதும் கவனமாய்ப் போடணும்;
 கோணமல் செம்மண்ணும் கட்ட வேணும்;
பத்துப்பாத் திரங்களும் பணிக்காகத் தேய்க்கணும்;
 பரபரன்னு காரியங்கள் செய்ய வேணும்;
வெந்நீர் முதலானதும் வேகத்துடன் போடவேணும்;
 வேடிக்கையாய்க் காரியங்கள் செய்ய வேணும்;
ஏழுமணிக் கடுப்புமூட்டி டிகாக்ஷன்காச்சி வைக்கணும்;
 ஏத்தமாய்க் காப்பிநன்ருப் போட வேணும்;
ரவைஉப்பு மாக்களோடு தோசைமுதலானதும்
 சொகுசாகப் பண்ணியங்கே வைக்க வேணும்;
கூட்டுக் கறிகளோடு குழம்பு ரசம்பண்ணணும்;
 கூசாமல் தாளிச்சுக் கொட்ட வேணும்;
பருப்புப்பச் சடிகளொடு பாங்காகச் சமைக்கணும்;
 பணிக்கையாய்ப் பாயசங்கள் பண்ண வேணும்;
ஜவ்வரிசி கொஞ்சம்போட்டு ஜீனியை ரொம்பப்
 போட்டுத்

திருப்தியாய்ப் பாலும்விட்டு இறக்க வேணும்;
வாதாம் முந் திரிகளொடு பருப்புகளும் போட வேணும்;
ஏலப்பொடி ரொம்பப்போட்டு இறக்க வேணும்;
சக்கரைப் பொங்கலும் சட்டமாய்ச் சமைக்க வேணும்;
அக்கார அடிசிலும் பண்ண வேணும்;
புளியஞ்சாதம், எள்ளுச் சாதம் பொகுருசியாப் பண்ணணும்;
தேங்காய்ச் சாதம் கட்டுச்சாதம் பிசைய வேணும்;
எலுமிச்சம் பழச்சாதமும் இசைவாகக் கலக்கணும்;
இன்பமுடன் சம்பாச் சாதம் கலக்க வேணும்;
அப்பளாம், உப்பட்டு, ஆமவடை பண்ண வேணும்;
அதிரசமும் அழகாகத் தட்ட வேணும்;
முறுக்கு, சீடை, தேங்குழல், முத்துசாரி பண்ணணும்;
வெல்லச்சீடை பொரிவிளங்காய் பண்ணணும்;
சோமாசி, ஓமப்பொடி, சொகுசாகப் பண்ணணும்;
கரிச்சிக்காய், ஜிலேபியும் செய்ய வேணும்;
பால்போளி, பதிர்பேணி,பணிக்காகப் பண்ணணும்;
குஞ்சாலாடு, காராப்பூந்தி செய்ய வேணும்;
ரவா உருண்டைகளும் நேர்த்தியாய்ப்பண்ணணும்;
ரவாஇட்லி நன்ருக வார்க்க வேணும்;
ரவாப தார்த்தங்களும் நேர்த்தியாய்ப் பண்ணணும்;
பத்துமணிக் குள்ளாகச் சமைக்க வேணும்;
பிராமணனுக் குச்சாதம் பத்தியாய்ப் போடணும்;
பரபரனனு காரியங்கள் செய்ய வேணும்;
நாத்தனர் முதலானவர்க் கன்னங்கள் போடணும்;
அழகாகப் பரிமாறி நிற்கவேணும்;
போஜனம் ஆனபின்பு தாம்பூலம் எடுத்துக்கொண்டு
பொகுதுரிதமாய்க் கொண்டுவந்துவைக்க வேணும்;
பதினொரு மணிக்குள்ளாக நீயும் சாப்பிடவேணும்;
படங்கள் முதலானதும் கோக்க வேணும்;
பாசிப்படம் கோக்க வேணும்; வளேப்பூக்கள் போடவேணும்;

புடைவைமேலே பூக்கள் நன்னுப் போட வேணும்;
பாசித்தாம் பாளங்கள், கட்டில், குறிச்சிகள்,
தொட்டில் முதலானதும் கோக்க வேணும்;
கதைபுராணம் எடுத்துக் கடகடன்னு வாசிக்கணும்;
காரியம் நன்ருகச் செய்ய வேணும்;
மூன்று மணிக்கே டிஃபன்குடுத் தனுப்பவேணும்
முன்பாகத் தலைவாரிக் கட்டவேணும்;
ஜடைசிங் காரமுதல் சிங்காரம் பண்ணவேணும்;
மல்லிகை முல்லைகளும் சூட்ட வேணும்;
ஆறுமணிக் குள்ளாக அழகாய்ச்சமைத் திறக்கணும்;
எட்டுமணிக் குள்ளாகச் சாப்பிட வேணும்;
ஊதுவத்தி, மட்டிப்பால், சாம்ப்ராணி முதலானதும்
உள்ளுக்கு வாசனைகள் போட வேணும்;
துளிர்வெத்தலை, களிப்பாக்கு, சொகுசான
சுண்ணும்புடன்
துரிதமாய் மடிச்செனக்குக் குடுக்க வேணும்;
ஏலம் கிராம்புகளும் ஜாதிக்காய் ஜாதிபத்திரி
(வால்மிளகு)
சரசமாய் என்றனுக்குத் தரிக்க வேணும்;
வில்லை, புனுகு, சந்தனம் வேடிக்கையாய்ப் பூசணும்;
பன்னீரும் நன்ருகத் தெளிக்க வேணும்;
மல்லிகை முல்லை சண்பகம் மயிர்முடியில் முடிக்கணும்;
அத்தர்கலந்த சந்தனம் பூச வேணும்;
அதிகசந் தோஷத்துடன் தாம்பூலம் போடணும்;
சரசமாய் என்றனுடன் இருக்க வேணும்;
இத்தனை காரியங்கள் செய்தையா னுல்-உனக்
கிஷ்டமான நகைகள் பண்ணித் தாரேன்,
இருபேரும் இன்பமாய் இருக்கலாமே.

## பத்தியம்

**பதினெட்டு வயசாச்சு; பரீட்சைபாஸ் ஆகவில்லை,**
**போஸ்ட்பியூன் வேலையில் இருப்ப தற்கோ?**

பார்ப்பயர்க் கிளப்பமாய்ப் பன்னிரண்டு ரூபாயில்
ஆடிட்டர் ஆபீஸில் அமர்வதற்கோ?
பிராமணர்கள் இல்லாத பட்டிக்காட்டுச் சீமையில்
பள்ளிக்கூட வாத்தியாராய்ப் போவதற்கோ?
சென்னை தனிலிருக்கும் செழித்தநாட்டுக்கோட்டைச்
செட்டியார் குமாஸ்தாவாய்ப் போவதற்கோ?
மெட்ராஸ் டவுனிலே மேன்மையான ஷாப்பிலே
மோட்டார் டிரைவராய்ப் போவ தற்கோ?
திருச்சினுப் பள்ளியிலே சினிமாவில் சேர்ந்துகொண்டு
தினந்தினம் டிக்கட்டுகள் குடுப்ப தற்கோ?
இந்தியாவில் புகழ்பெத்த எஸ்.ஐ. ஆர். கம்பெனியில்
இஞ்சின் டிரைவராய் இருப்பதற்கோ?
அமாவாசை இருட்டிலே அஞ்சாறு பேருடன் கூடி
அழகான கன்னங்கள் வைப்பதற்கோ ?
கல்யாண மாசத்தில் காரியஸ்த ருடன்கூடிக்
கரண்டி ஆபீஸ்வேலை பார்ப்பதற்கோ?
அபிச்ரவணம் ஜபிக்கவோ, அப்பம்வடை திங்கவோ,
அழகான ரங்காட்டம் ஆடுதற்கோ?
படிப்புத்தான் ஏறவில்லை; பரீட்சைபாஸ் ஆகவில்லை.
பாட சாலையில் சேர்வதற்கோ?
திரட்டுப்பால், காட்பி, தயிர்வடை தினமும்திங்க
அத்தர் புனுகுகளை ஆனந்தமாய்ப் பூசிக்கொண்டு
விடுவீடாகச் சீட்டுக்களை ஆடிக்கொண்டு
திரிவதாய் எண்ணமகொண்டீரோ?
தெரியச் சொல்லும் ஸ்வாமி!

## பத்தியம் (வேறு)

கோபால ஹுத்திலே கொழக்கட்டை பண்ணினர்;
கோதண்ட ராமையன் திருடிவிட்டான்;
தீபாவளிக்குன்னு வாங்கின வேஷ்டியைத்
தீப்பிடிக்காதடடி அடுப்பில் வச்சான்;

மாபாவி கோவிந்தன் மாட்டுப்பொண் பட்டினி;
மாங்காயும் பழையதும் மூணு வேளை;
நீபாவி குடிகாரன், நீந்தினய் கள்ளிலே;
நெய்வந்து பூனையைக் குடிச்சுப் போச்சு.
கொடிய கலிகால மகிமையை என்னசொல்வேன்?
விடியஒரு நாழிக்குமுன் வெளியில் வந்தேன்.
பொடியும் இல்லாமல் மூக்கோட்டை அடைச்சுப் போச்சு.
மடியில் வெறும்பட்டையும் இல்லையே வாத்தியாரே!

## பத்தியம் (வேறு)

பண்ணயப்போல் வீடுகளும் பாஞ்சாலி கிணறுகளும்
பால்பசுவும் வேணுமுன்னு தேடியிருந்தேன்.
காராம் பசுவுகளும் கட்டுக்கட்டாய் நெல்லுகளும்
களஞ்சியங்கள் வேணுமுன்னு தேடியிருந்தேன்.
பெண்ணுற்றுப் பாச்சலும் பாகவதாள் சேவையும்
பாக்கியங்கள் வேணுமுன்னு தேடியிருந்தேன்.
தணிஞ்சிருக்கும் மாமரம், ஜாதிநா ரத்தைமரம்,
சர்க்கரை நாரத்தையும் கொடிமுந்திரியும்,
ஓசந்திருக்கும் தென்னமரம், ஜாதிப் பலாமரம்,
இஞ்சி எலுமிச்சையும் மஞ்சள் தோட்டமும்
கொப்பரையில் வெந்நீர்வச்சுப் பக்குவமாய்க்
கீழிறக்கிச்
குளிப்பாட்டி வச்செனக்குப் பட்டை உடுத்தி
தலைவாரிப் பின்னிவிட்டுத் தகுந்தபல நகைபூட்டி
அத்தர்புனுகு சவ்வாது பன்னீரும் சேர்ந்த
குச்சிலிதப் பொட்டணிந்து கூர்விழிக்கு மைஎழுதிக்
கூடரெண்டு தாதிமார் இருக்க வேணும்.
கோவிலுக்கு நமஸ்காரம் பண்ணவே போனாலும்
கூடரெண்டு சேவகர்கள் வருக வேணும்.
ஃபிடன் வண்டி மேலேறிப் பிறந்தகம் போனாலும்
பிரியாத என்கணவர் வரவேவேணும்.

இப்படிக்கு என்றனக்கு இருக்க வேணும்;
என்மனசு கோணாமல் இருக்க வேணும்;
தந்தைதாய் பார்த்தென்னை மகிழ வேணும்;
இப்படிக்கு என்கை மேலாக இருக்க வேணும்.

## பத்தியம் (வேறு)

வெகுநாளாய்க் காத்திருந்து வேணபடி வேணுமுன்னு
தேடிவந்து உம்மைநான் மாலையிட்டேன்.
அழகிலே அதிரூப மன்மதனைப் போல்எண்ணி
மனம்மகிழ்ந்து ஓடிவந்து மாலையிட்டேன்.
குணத்திலே அதிகமுன்னு குணசாலி உம்மைநான்
குணமுன்னு நம்பிநான் மாலையிட்டேன்.
எழுதணும், படிக்கணும், இங்கிலீஷ் தெரியவேணும்;
மிலிடேரி மிஸ்டராய் இருக்கவேணும்.
மெட்றிகுலேஷன், எம்.ஏ.பி ஏ வரையிலும் இருக்க
வேணும்.
ஹைகோர்ட்டு வக்கீலாய் இருக்க வேணும்.
டவுனிலே மாடிவீடு சௌக்யமாய் இருக்கவேணும்.
ஹாலுள்ளு மோஜைஸோபாவும் வேணும்.
மணிப்படி வேலைசெய்ய வேலைக்காரி வேணும்.
தலைவாரிப் பின்னஒரு தாதி வேணும்.
மாமனார், மாமியார், மச்சினன், நாத்தனார்,
அவரவர்கள் தனித்தனியாய் இருக்க வேணும்.
பனார்ஸுப் புடைவை வேணும்; பாஜோபந்து பாட்டில்
வேணும்;
தங்கஒட்டி யாணம் நாகொத்துச் செய்ய வேணும்;
கொட்டடிப் புடைவைவேணும்! கோட்டைப்பவுன்
மாலை வேணும்;
கெட்டிக் காப்புக் கொலுசுநீர் செய்யவேணும்;
இங்கிலீஷ் கம்மல்ஓலை ஜாதிரத்னக் கெம்பட்டிகை,
வலமூக்கு வைரப்பொட்டுச் செய்ய வேணும்;

ஆடுதுறைப் புடைவை வேணும்; அழகான நாகர்
வேணும்;
கெடிகாரச் சங்கிலிநீர் செய்ய வேணும்;
இத்தனையும் பூட்டிக்கொண்டு ஏற்பாடாய்
நான்இருப்பேன்;
பத்துமணி ஆனவுடன் பரிமாறி விடுவேன்.
கையலம்பி யானவுடன் கைக்குட்டை தந்துநான்
களையாறச் சேர்பாவில் ஆற விடுவேன்.
வெத்தலை சாமான்கள் விதவிதமாய்க் குடுத்துநான்
வேடிக்கையாய்ப் பேசித்தாம் பூலம்தருவேன்.
ரெட்டைக் குதிரைச் சாரட்டை ரெடியாகக்
கொண்டுவரச் சொல்லிக்
கச்சேரிக்குப்போகநான் தயார் செய்வேன்;
கெட்டிக்காரத் தனமாகக் கேஸுகளைப் பேசியே
ஃபீசுகளை வாங்கிநீர் தருக வேணும்.
பெட்டிச்சாவி, பீரோச்சாவி, கைப்பெட்டிச்
சாவியைப்
பணத்துடன் என்னிடம் குடுக்க வேணும்,
இப்படிக்கு எந்தனுக்கு இருக்க வேணும்.
நான் சொன்னபடி வார்த்தைகள் கேட்க வேணும்,
இப்படிக்கு என்மனசு கோணாமல் இருக்க வேணும்.

## பத்தியம் (வேறு)

கமலக் கடுக்கனென்ன, கன்னத்து டாலென்ன,
கற்பூரத் தாசியோடே சிநேகமென்ன?
சிவப்புக் கடுக்கனென்ன, சிங்காரப் பேச்சென்ன,
சிதம்பரத்துத் தாசியோடே சிநேகம் என்ன?
அல்பாக்காக் கோட்டென்ன, அடிக்கடிதுடைப்பென்ன,
அரியலூர் அன்னத்தோடே பேச்சும் என்ன?
மட்டிக்கலர்க்கோட்டென்னமயிர்சுருட்டைஅழகென்ன,
மயிலாப்பூர் மாதரோடே மயக்கம் என்ன?

பைஸைகிள் சவாரி என்ன?
கோபத்துடன் குனிஞ்சதலைப் பார்வை என்ன?
அந்தரங்கம் உள்ள துரையே!

## பத்தியம் (வேறு)

கோமள வல்லிநீ கோரிய படிஉன்னை
நேமமாய் மணங்களை நேத்துச் செய்தேன்.
அன்னமே, நான்இனி அரைக்ஷணம் பிரிவேனோ?
சொன்னபடி கேட்கிறேன், சுந்தரியே!
முன்னமே மொழிந்ததை முற்றிலும் மறவாதே;
இன்னம் உனக்குநான் எச்சரித்தேன்;
தாபங்களைத்தீர்த்துத் தருணமீ தென்றுரைக்கக்
கோபமது செய்யாதே, கோமளாங்கி!
நாடியே மஞ்சத்தின் மேலேறிவந்து
கூடி என்னுடன் சுகம் அநுபவிக்க
வாடிஎன் கண்மணியே, வனக்குயிலே,
ஓடிவந் தெனக்கொரு முத்தம் தாடி.
தேடியே என்றனை மாலையிட்டு
நாடியே பாதத்தில் பணிந்து கூடி
வாடிஎன் கண்மணியே, வனக்குயிலே,
ஓடியே தாம்பூலம் வாங்கிக்கோடி.

## பத்தியம் (வேறு)

பிமராஜன் குமாரி, பூவின் சுகுமாரி,
பெண்மணி என்றனிரு கண்மணியே;
பாமினி நீதந்த பத்ரிகை கொண்டுநான்
பட்சமாய் உனைநாடி ஓடிவந்தேன்.
கோமளாங்கி, உன்றன் வடிவினைப் பார்த்துநான்
கோலா சலத்துடன் மனமகிழ்ந்தேன்.
தாமரஸ தளாய தாக்ஷிஉன் னைக்கூடித்

துவாரகை மாநகர் தன்னில் வந்தேன்.
நேமமாய்க் கல்யாணம் செய்து கொண்டேன்.
பிரேமையாய் உன்னுடன் மனமகிழ்ந்தேன்.
ஆசையாய்த் தாம்பூலம் புஷ்பம்தந்தேன்.
அன்புடன் வாங்குவாய் அமிர்தவசனி!

## பத்தியம் (வேறு)

என்றனுக்குத் தெரியாமல் என்னைவந்து ஒருபெண்
உறுதியாய் நம்பினேன் என்றுரைத்து
அல்லும் பகலுமாய் அழகிஎன் சரணத்தை
மல்லிகை முல்லைஜாதி மலர்அர்ச்சித்துத்
துன்பங்கள் தீரவும் இன்பங்கள் சேரவும்
அன்புடன் என்றன்முன் அழகாய் விளங்கிக்
கடைக்கண்ணால் பார்த்துக் கவலைதனைத் தீர்த்து
அடைக்கலம் அடைந்தாளைப் பாருமென்றாள்.
மொழிகளைக் கேட்டுஎன் மனமிரங்கி
விழியால் ஒருவிசை பார்த்துவிட்டு
அழகான வரங்களை அளித்துப்
பிழைகளைப் பொறுப்பதென் பெருமைக்கழகே.

## பிள்ளைக்குத் தவம்

மானம் இடிஇடிக்க மந்தையுள்ளே தண்ணிநிற்க
மதலைப்புள்ளை அடிவைக்க மதிலோரம் குந்தியிருந்தேன்.
கோடை இடிஇடிக்கக் கொல்லையெல்லாம் தண்ணிநிற்கக்
குழந்தைப்புள்ளை அடிபார்க்கக் கோடிதவம்இருந்தேன்
பறக்கிற பட்சிகளா, பலகுருவி அன்னங்களா,
சேர்ந்துவரும் சிட்டுக்களா, சிநேகிதத்தைக் கண்டீர்களோ?
சிட்டுக் குருவிகளா, சித்தப்பார் சேனைகளே,
சின்னப்புள்ளை அடிபார்க்கச் செவரோரம் குந்தியிருந்தோம்.

## மாப்பிள்ளையின் அழகு

கீரை கடைஞ்சாப் போலே கீழ்வாயும் மேல்வாயும்,
பருப்புக் கடைஞ்சாப்போல் பத்தெட்டு மீசைகளும்.

## பொன்னுக்கு ஆசைப்பட்டவள்

வெள்ளித் திருகாணி (வேண்டாம் என்று சொல்லி)ப்
பொன்னுக்கு ஆசைப்பட்டுப் பாவை உருகறேனே!

## எனக்கு வேணும்

ஏலேலோ ஏலலிலோ, ஏலேலோ ஏலலிலோ.
திரட்டுப்பால், மனோகரம், தேங்குழல் வேணும்.
உடன்நன்ருய்ச் சாப்பிடப் பதிர்ப்பேணி வேணும்.
காரரிசி அவல்வேணும்; கட்டிவெல்லம் வேணும்.
கலந்து நன்ருய்ச் சாப்பிடக் கல்கண்டு வேணும்.
ஜிலேபி,லட்டுவேணும், செல்வரப்பம் வேணும்.
செவ்வரிசிப் பொங்கலும் சீரான்னம் வேணும்.
லட்டுருண்டை வேணும்; ரவாலாடு வேணும்,
ரவையிலே செய்ததொரு பால்போளி வேணும்.
அஞ்சுசேர் நெய்சேர்த்த உக்கோரை வேணும்,
அஞ்செடை வெல்லம்சேர்த்த பொரிவிளங்காய்
வேணும்.
அடிநாக்குத் தித்திக்க அதிரசம் வேணும்.
நுனிநாக்கு மணக்கஒரு ஆமவடை வேணும்.
ஏட்டோடே தயிர்வேணும்; எண்ணெய்மாங்காய்
வேணும்.
புளிக்காத சாதத்துக்கொரு புளித்தொகையல் வேணும்.
புளிச்ச பழையதுக்கு மோர்மிளகாய் வேணும்.
இஞ்சி எலுமிச்சங்காய் பச்சைமாங்காய் வேணும்.
நலமாக வாசிக்க நார்த்தங்காய் வேணும்.

கிடாரங்காய் ஊறுகாய் வெந்தயமாங்காய் வேணும்.
நாலுநாளைக் கொருஎண்ணெய்முறை வேணும்.
நலமாகத் தேச்சுவிட நாத்தனர் வேணும்.
எட்டு நாளைக்குஒரு எண்ணெய்முறை வேணும்.
இன்பமாய்த் தேச்சுவிடத் தாயாரும் வேணும்.
ஒருகொப்பறை வெந்நீர் உருகஉருக வேணும்.
உடம்பெல்லாம் புடிச்சுவிடத் தாதிஒத்தி வேணும்.
சீயக்காய் அரைப்பரைக்கச் சிறுதங்கை வேணும்.
மஞ்சள் அரைச்சுவைக்க மருமாளும் வேணும்.
சிக்குத்தலை தேச்சுவிடச் சித்திமார் வேணும்.
அழுக்குத்தலை தேச்சுவிட அத்தைமார் வேணும்.
சமுத்ரப்பச்சை பூலாங் கிழங்குகளும் வேணும்.
பச்சென்று பூசஒரு பட்டணமஞ்சள் வேணும்.
வெந்நீரு மொண்டுவிடத் தாதிஒத்தி வேணும்.
ஒருபிடி மிளகுவேணும்; பிடிசீராம் வேணும்.
உறைக்க உறைக்கச் சாத்தமுது செய்திட வேணும்
புளிக்காய்ச்சல் வேணும்; பொடித்துவல் வேணும்.
பூசணிக்காய்ப் பொடித்துவல் புதுமையாய் வேணும்.
பறங்கிக் கொட்டைப் பால்கூட்டுப் பணிக்காக வேணும்.
புடலம்பிஞ்சுப் பால்கூட்டும் புதுதினுசா வேணும்.
பாகற்காய் பிட்லையும் வாசிக்க வேணும்,
பட்டணம் பெருங்காயம் பொரிச்சுப்போட வேணும்.
சேப்பம்பட்டைப் பச்சடி தினுசாக வேணும்.
வெள்ளரிக்காய்ப் பச்சடி விதவிதமா வேணும்.
பிஞ்சுக்கத் தரிக்காய்க் கறியமுது வேணும்.
கருணைக் கிழங்கு மசியலும் வேணும்.
சேப்பங் கிழங்கு வறுவலும் வேணும்.
கூடவே கத்தரிக்காய்க் கோசுமலி வேணும்
பருப்பரிசிப் பொங்கல்வேணும்; பச்சைப்புளி வேணும்;
பச்சென்று போடஒரு வாழைஇலை வேணும்.
பங்களூர்ச் சக்கரைவேணும்; இளந்தேங்காய் வேணும்.
பச்சைநாடன் ரஸ்தாளிப் பழங்களும் வேணும்.

எண்ணெயிலே பொரிச்செடுத்த வத்தல், வடாம்
வேணும்.
நெய்யிலே பொரிச்செடுத்த இலவடாம் வேணும்.
அழகாகப் பொரிச்செடுத்த அப்பளாம் வேணும்.
வாழைக்காய்ப் பஜ்ஜியும் வாசனையாய் வேணும்:
கத்திரிக்காய்ப் பஜ்ஜியும் கமகமன்னு வேணும்.
இலைபோட்டுத் தீர்த்தம் வைக்க ஏற்ற தங்கை வேணும்.
இன்பமாய்ப்பரிமாறத் தாயாரும் வேணும்.
கையலம்ப ஜலங்கொடுக்கத் தாதிஒத்தி வேணும்.
களைப்பாற உட்கார நாற்காலி வேணும்.
களிப்பாக்கு வகையரு தினுசாக வேணும்.
அத்திக்கடை வெத்தலையும் அழகாக வேணும்.
தேங்காய்ப்பூ வகையரு தினுசாக வேணும்.
வாசனைச் சுண்ணும்பு விதவிதமாய் வேணும்.
ரெண்டுமணி ஆனவுடன் டிஃபன்செய்ய வேணும்.
நாகரிக பட்சணங்கள் நலமாக வேணும்.
சோமாசி, கேசரி, அல்வாவும் வேணும்.
சூர்யகலா, சந்த்ரகலா பணிக்காக வேணும்.
எஸ்ஸன்ஸ் காபி ஒருகப்பு வேணும்.
ஏற்பாடாய் வெத்தலை வகையரு வேணும்.
அவரிஅணிபாய் வச்சுப்பின்ன அரும்புகளும் வேணும்.
அழகாக வச்சுப்பின்ன அம்மாமி வேணும்.
தஞ்சாவூர்த் தாண்டா தினுசாக வேணும்.
பன்னீரில் நனைச்ச கதம்பமும் வேணும்.
கல்லிழைச்ச நாகர் ஒசத்தியாய் வேணும்
அதுக்கிசைந்தாற் போல வைரத்திருகு வேணும்,
ஆயிரம் ரூபாயில் அட்டிகையும் வேணும்.
அரைப்பவுன் மாலையும் அழகாக வேணும்.
கெடியாரச் சங்கிலிகள் தினுசாக வேணும்.

காதுக்குக் கமலத்தோடு பணிக்காக வேணும்.
ஆயிரம் ரூபாய்க்கு மூக்குப்பொட்டு வேணும்.
அழகாகப் போட்டுக்கொள்ள வைரப்புலாக்கு வேணும்.
தகதகன்னு தங்கவளை தினுசாக வேணும்,
அதுக்கிசைந்தாப் போல வைரவளை வேணும்.
தங்கஒட்டியாணம் தகதகன்னு வேணும்.
நாகஒத்து வங்கியும் நலமாக வேணும்.
ஜரிகைப் புடைவைகள் தனித்தனியாய் வேணும்.
ஓம்ரூல்* புடைவையில் உசத்தியாய் வேணும்.
ஆரண்யக் கறுப்பிலொரு புடைவையும் வேணும்.
அதுக்குத் தகுந்தாப்போல் ரவிக்கையும் வேணும்
அஸ்மான கிரிவேணும்; அதுக்குக்கட்டில் வேணும்.
அழகாக ரஜாயி மெத்தையும் வேணும்.
திண்டு, தலையாணி, ஜமக்காளம் வேணும்.
தினுசாகப் போர்த்திக்கொள்ளப் பெட்ஷீட்டு வேணும்.
நிழல்பார்த்து நிற்கஒரு நிலைக்கண்ணாடி வேணும்,
நேசமாய்ப் பேசக் கணவனும் வேணும்.
வாசனைச் சாமான்கள் விதவிதமாய் வேணும்.
வர்ணிச்சுச் சொல்வதற்குப் பர்த்தாவும் வேணும்.
உட்கார்த்தி வச்சுச்செய்ய மதனிஒத்தி வேணும்.
ஓயாத சீர்செய்ய உடன்பிறந்தான் வேணும்.
அறைக்கிருக்க வெளிக்கிருக்க அத்தைமார் வேணும்.
பத்தியம் வடிச்சுப்போடப் பாட்டிஒத்தி வேணும்.
கொட்டைப்பாக்குச் சீவல்சீவக் கொழுந்தனும்
வேணும்.
கொழுந்து மடிச்சுப் போட நாத்தனார் வேணும்.
மாமியார் ஒண்ணுசொன்னால் மனம்பொறுக்க
மாட்டேன்.
நாத்தனார் ஒண்ணுசொன்னால் நான் சகிக்க மாட்டேன்.
ஓர்ப்படிகள் ஒண்ணுசொன்னால் ஒத்திருக்க மாட்டேன்.

---

*Home rule

கொழுந்தனுர் ஒண்ணு சொன்னுல்கூடியிருக்கமாட்டேன்.
இத்தனையும் என்றனுக்கு வேணும்எங்கள் அம்மா!
ஏலேலோ!

## ஒன்றும் வேண்டாம்

வெத்தலையுந்தான் வேணுமா, வீராயி; – நீவச்ச
வேதனைதான் போதாதோ?
பாக்குந்தான் வேணுமா, பாவாயி?–நீவச்ச
பாதகமுந்தான் போதாதோ?
சுண்ணும்புந்தான் வேணுமா, சூராயி?-நீவச்ச
சூதுந்தான் போதாதோ?
புகையிலையுந்தான் வேணுமா, பூவாயி? – நீவச்ச
போதனையுந்தான் போதாதோ?
காசுக்கட்டி யுந்தான் வேணுமா காவேரி? – நீவச்ச
கவலையுந்தான் போதாதோ?
எனக்கு ஒண்ணும் வேண்டாம் - சீராளா,
சிவனடி கெடைச்சால் போதும் சீராளா!

## கதவு திறக்கிற பாட்டு

1. ஈரோப்பியர் செய்தசட்டம்,இங்கிலீஷ் படிக்கப் போறேன்;
ஏற்றமாய்ப் பாடம் சொல்வார் பொண்ணே, – அங்கே
இஷ்டமாய்ப் படித்து வருவேன்; கண்ணே!

2. ஆயிரம் மாஸ்டர்களும் பதினுயிரம் பிள்ளையுடன்
அழகாய்ப் படித்து வருவேன் பொண்ணே, – நான்
தெளிவாய்ப்படித்து வருவேன் சண்ணே!

3. சேலம், திருநெல்வேலி, திருச்சி, கும்பகோணம்
சீராய்ப் படித்துவருவேன் பொண்ணே,– நான்
ஜோராய்ப் படித்துவருவேன் கண்ணே!

4. பரீட்சைக்குப் போகுமுன்னே பக்குவ மானுல்நீயும்
பரீட்சைக்குப் போய்வருவேன் பொண்ணே; - நானும்
பாஸுகள் பண்ணிவருவேன் கண்ணே!

5. பரீட்சைக்குப் போகுமுன்னே பக்குவம் ஆனுல்என்ன?
பரீட்சைக்குப் போய்வாருமே ஸ்வாமி; - நீரும்
பாஸுகள் பண்ணிவாரும் ஸ்வாமி!

6. திருவனந்த புரம்விட்டுச் சென்னப்பட்டணம்
போய்ப்படிச்சுச்
சீக்கிரம் வருவேனடி பொண்ணே; – நானும்
பேச வருவேனடி கண்ணே!

7. நானும் வருவேனுன்னு நாயகி வணங்கினுள்;
நயமாகச் சொன்னுரே ராஜரும்; – அப்போ
சிநேகமாய்ச் சொன்னுரே தேவியுடன்.

8. கோகில மே,உன்னைக் கூட்டிக் கொண்டு போகக்
கூடாது எனக்கிப்போ பொண்ணே; - அது
நடவாது எனக்கிப்போ கண்ணே!

9. பிளேக்கா இருக்கிறதுன்னு பேப்பரில் கண்டேன்நான்;
பீச்சுக்குப் போகாதேயும் ஸ்வாமி! – நீரும்
கிரிக்கட் போகவேண்டாம் ஸ்வாமி!

10. தங்கமே, எனக்கங்கே சரியாய்ப் படிக்கக்கூட
டயம்கூடப் போதாதே பொண்ணே; – நானும்
கிரிக்கட்டுப் போவேனே? கண்ணே!

11. சுந்தரரே, நீரும் சுகமாய்ப் போய்ச் சேர்ந்திரானுல்
சீக்கிரம் எழுதுவீரோ ஸ்வாமி? – எனக்குக்
கார்டுகள் அனுப்புவீரோ ஸ்வாமி?

12. பொற்கொடியே, உனக்குப் போனவுடன்எழுதுகிறேன்;
போக விடைகொடடி பொண்ணே, – நீயும்
மகிழ்ந்து விடைகொடடி கண்ணே!

13. வணங்கி நமஸ்கரிச்சாள், மாது சிரோமணியும்;
வாழ்த்தி நடந்தாரே ராஜரும்; – அப்போ
சீக்கிரமாய்ச்சேர்ந்தாரே சென்னபட்டணம்.

14. சாந்திக்கு முகூர்த்தம்வச்சுச் சதிராக வந்தவுடன்
சட்டமாய் ராத்திரியில் இருபேரும் – அப்போ
தங்கக் கதவைத் தாழ்ப்பாள் போட்டுக்கொண்டார்.

15. காலேஜியில்படிச்சுக் காலங்கள் போனாலும்
கண்டேனே, உன்னைநான் பொண்ணே, - இப்போ
பார்த்தேனே, உன்னைநான் கண்ணே!

16. காசு செலவிட்டது கணக்கு வழக்கில்லை;
கண்டேனே உம்மைநான் ஸ்வாமி, - இப்போ
பார்த்தேனே உம்மைநான் ஸ்வாமி!

17. மெட்ராஸ் போனவுடன் லெட்டர் எழுதினால்
துட்டுச் செலவாகுமோ ஸ்வாமி? – எனக்குச்
சற்றே சொல்லவேணும் ஸ்வாமி!

18. பிரைவேட் லெட்டர்களை ஃபாதர் மதர்அறிந்தால்
பார்த்துப் பரிகசிப்பார்; பொண்ணே, – நானும்
பயந்து இருந்தேனடி, கண்ணே!

19. சிவப்புக்கல் வச்சிழைச்ச ஜடைநாகம் பண்ணித்
தாரேன்;
ஜெவந்தி சரம்ஆடுவோம் பொண்ணே, – எனக்கு
டிஃபன் எடுத்துத் தாடி கண்ணே!

20 பனாரஸ் பட்டுத் தாரேன்; பில்லிஸ் ரவிக்கை தாரேன்;
மில்க் எடுத்துத்தாடி, பொண்ணே – நீயும்
பீட்டல் மடிச்சுத்தாடி கண்ணே!

21. பனாரஸ் பட்டு வேண்டாம்; பில்லிஸ் ரவிக்கை
வேண்டாம்;
பி.ஏ. பரீட்சை தேறும் ஸ்வாமி; - நீரும்
பட்டணம் போய்ப்படியும் ஸ்வாமி!

22. என்றன் பசுங்கிளியே, இங்கிலீஷ் சொல்லித்தாரேன்;
ஏறடி கட்டில்மேலே பொண்ணே, - நீயும்
வாதாட வேண்டாமடி கண்ணே!

23. ஏத்தமான துரையே, எம்.ஏ. பரீட்சை தேறி
எல்.டி.க்கும் போகும்போது ஸ்வாமி, – நானும்
இங்கிலீஷ் சொல்லிக்கிறேன் ஸ்வாமி!

24. கல்இழைச்ச ராக்கொடியும் நாகரும் பண்ணித்தாரேன்?
என் எதிர் நில்லடி பொண்ணே, - நீயும்
நேராக நில்லடி கண்ணே!

25. கல்இழைச்ச ராக்கொடியும் நாகரும் பண்ண
வேண்டாம்;
சூப்ரெண்ட் பரீட்சை தேறும் ஸ்வாமி, – நீரும்
வேலூரில் போய்ப்படியும் ஸ்வாமி!

26. பாட்லியும் பண்ணித் தாரேன்; புவுன்மாலை
பண்ணித் தாரேன்;
பாரடி என்முகத்தைப் பொண்ணே, நீயும்
பாதத்தைப் பார்க்காதடி கண்ணே!

27. பாட்லியும் பண்ணவேண்டாம்; பவுன்மாலை போட
வேண்டாம்;
பாரிஸ்டர் பரீட்சைதேறும் ஸ்வாமி, - நீரும்
பாரிஸில் போய்ப்படியும் ஸ்வாமி!

28. கல்இழைச்ச வங்கியும் காறையும் பண்ணித் தாரேன்;
க்ளாத் எடுத்துத்தாடி பொண்ணே, – நீயும்
காலைப் புடியடி கண்ணே!

29. கல்இழைச்ச வங்கியும் காறையும் பண்ணவேண்டாம்;
கவர்ன்மெண்ட் பரீட்சைதேறும் ஸ்வாமி,–நீங்கள்
இங்கிலாந்தில் போய்ப்படியும் ஸ்வாமி!

30. பட்டணம் கமலம், பச்சை, பதக்கங்கள் பண்ணித்
தாரேன்;

பரிகாசம் செய்யாதே, பொண்ணே, – நீயும்
பழ்ச்சுக்காட் டாதேடி கண்ணே!

31. பட்டணம் கமலம், பச்சை, பதக்கங்கள் பண்ண
வேண்டாம்;
இங்கிலீஷ் பரீட்சை தேறும் ஸ்வாமி, – நீரும்
இப்போதே பாஸ்பண்ணி வாரும் ஸ்வாமி!

32. கெடியார ஓலையும் கிளிநாகமும் பண்ணித்தாரேன்;
கிட்டவந்து நில்லடி பொண்ணே, – நீயும்
கட்டிஒரு முத்தம்தாடி கண்ணே!

33. கெடியார ஓலையும் கிளிநாகமும் பண்ணவேண்டாம்;
டாக்டர் பரீட்சை தேறும் ஸ்வாமி, – நீரும்
மெட்ராஸ் போய்ப்படியும் ஸ்வாமி!

34. கேசுகள் பேசினல்ரு பீஸுகள் ரொம்ப வரும்;
கெடியாரத் தோடுதாரேன் பொண்ணே, – நீயும்
கிட்டேவந்து நில்லடி கண்ணே!

35. கெடியாரத் தோடு வேண்டாம்; கிளிநாகம் பண்ண
வேண்டாம்
[வக்கில் பரீட்சை தேறும் ஸ்வாமி, – நீங்கள்
வக்காலத்து வாங்கிக் கொள்ளும், ஸ்வாமி!]

36. சீமைக் கமலம்வச்சுச் செதுக்குப்புல் லாக்குந் தாரேன்;
சிரிச்சொரு வார்த்தைசொல்லு பொண்ணே, – நீயும்
மகிழ்ந்தொரு வார்த்தைசொல்லடி கண்ணே!

37. சீமைக் கமலம்வச்ச செதுக்குப்புல் லாக்குவேண்டாம்;
சிரஸ்தார் பரீட்சைதேறும் ஸ்வாமி, – நீரும்
கல்கத்தாவில் போய்ப்படியும் ஸ்வாமி!

38. ஒத்தக்கல் மூக்குத்தி ஒசத்தியாய்ப் பண்ணித்தாரேன்;
உதறிப் போட்டி மெத்தை, பொண்ணே, – நீயும்
நன்ருகப் போடடி கண்ணே!

39. ஒத்தக்கல் மூக்குத்தி ஒசத்தியாய்ப் பண்ண
வேண்டாம்;

உத்யோகப் பரீட்சைதேரும் ஸ்வாமி, – நீரும்
உறுதியாய்ப் போய்ப்படியும் ஸ்வாமி!

40. தங்கஒட்டி யாணமும் சட்டமாய்ப் பண்ணித் தாரேன்;
[சற்றே அருகில்வாடி பொண்ணே, – நீயும்
சங்கோஜம் வேண்டாமடி கண்ணே!]

41. தங்கஒட்டி யாணமும் சட்டமாய்ப் பண்ணவேண்டாம்;
கருங்கோர்ட் போய்வாரும் ஸ்வாமி, – நீரும்
பெருங்கோர்ட் போய்வாரும் ஸ்வாமி!

42. பரீட்சை ஜெயிச்சாக்கே பாக்கியங் கள்கண்டு
கொள்வோம்;
பலநகை பண்ணிக்கொள்வோம், ஸ்வாமி, – நாம்ப
அப்போது பார்த்துக்கொள்வோம் ஸ்வாமி!

43. பரீட்சையி லேஜயிச்சுப் பாஸாகி வந்ததும்
ஃபாதர் அறியாரோ பொண்ணே? – நீயும்
கார்டுகள் காணலையோ கண்ணே!

44. லெட்டர் கிடைக்கவில்லை; நிஜமாக நினைக்கவில்லை;
நிச்சய மாகச்சொல்லும் ஸ்வாமி, – நீங்கள்
நிஜமாகச் சொல்லவேணும் ஸ்வாமி.

45. வேலை கிடைக்காவிட்டால் விட்டுவிட்டுப் போவாயோ?
விவரமாய்ச் சொல்லடி பொண்ணே, – நீயும்
கபடமாய்ச் சொல்லாதேடி கண்ணே!

46. வேடிக்கை வார்த்தையை வெளியில்கேட்டிருப்பார்கள்;
மெள்ளச்சொல் லும்சற்றே ஸ்வாமி, – நீங்கள்
மெதுவாகச் சொல்லவேணும் ஸ்வாமி!

47. இத்தனை நேரமாய்க் கேட்டது போலவே
இதுவும் கேட்கட்டுமே பொண்ணே, – அவர்கள்
அதுவும்கேட்கட்டுமே கண்ணே!

48. அறியாமல்சொல்லிவிட்டேன்;அபத்தங்கள்உண்டானால்
பொறுத்துக் கொள்ளவேணும் ஸ்வாமி, – நான்
தெரியாமல் சொல்லிவிட்டேன் ஸ்வாமி!

49. குட்நைட் என்றுசொன்னல் ஆல்ரைட் என்று
சொல்லிக்
[கையைக் குலுக்குவாடி பொண்ணே, – நானும்
களிப்புடன் ஏத்துக்கொள்வேன்கண்ணே!]

50. டயம்பீஸ் பார்த்து வாடி, டயம்மெத்த ஆகலாச்சு;
டயம்பார்க்க வேணும் பொண்ணே, –நானும்
[டயத்தில் எழவேணும் பொண்ணே.]

51. டு ஓ க்ளாக் ஆச்சுது, [வெகுநேரம் போச்சுது;]
சொல்லப் பயப்படுகிறேன் ஸ்வாமி, - உங்கள்
[சொல்லைத் தட்டமாட்டேன் ஸ்வாமி!]

52. டுமாரோ நைட்டிலே பேசிக்கொள் வோம்நாம்பள்;
தூங்குவோம் இனிமேல் பொண்ணே, – நாம்
நித்திரை செய்வோமடி கண்ணே!

53. இங்கிலாந்து சபையிலே கவர்னர் இருந்தபோது
ஏற்றமாய் வாழ்ந்திருந்தார் இருபேரும் - நல்ல
இஷ்டமாய் வாழ்ந்திருந்தார் இருபேரும்.

## ஆகாதோ?

**அரசன்:** சந்தனக் கட்டை, குங்குமக் கட்டை,
வேகும்போது நீஅதில்
சாய்ந்து குதிச்சால் ஆகாதோ?

**கணவன்:** செங்கரும்பு வெட்டிச் சிறையிலே
வச்சிருந்தேன்; - அதைத்
தின்னுருசி கண்ட ராஜாவே, நீ அதில்
சேர்ந்து குதிச்சால் ஆகாதோ?

## சம்பந்தி ஏசல்

முட்டாளு சம்பந்திக்கு – தத்தையா - சம்பந்திக்கு
எத்தனை பேர் ஆம்படையான்?

கூட்டிப் பெருக்கக் குப்புவையன் ஒத்தன்,
பெருக்கி மொழுகப் பெரியசாமி ஒத்தன்,
தண்ணீர் தூக்கிவரத் தவசிப்பிள்ளை ஒத்தன்,
வெந்நீரு போட வேங்கடராமன் ஒத்தன்,
அரைப்பு அரைக்க அப்புவையன் ஒத்தன்,
மஞ்சள் அரைக்க மகாதேவன் ஒத்தன்,
சமைச்சுப் பரிமாறச் சாமுவையன் ஒத்தன்,
வெத்தலே மடிக்க வாணியன் ஒத்தன்,
பாக்குச்சீ வித்தரப் பண்டிதன் ஒத்தன்,
கூடி விளையாடக் கோமுட்டி ஒத்தன்,
சேர்ந்து விளையாட முன்சீபு ஒத்தன்,
கட்டிலின் மேலேறக் குறும்பக்கவுண்டன் ஒத்தன்,
முதுகுக்கு மஞ்சள்பூச முத்துக்கொத்தன் ஒத்தன்,
வாரி முடிக்க வையாபுரி ஒத்தன்
நெத்திக்குப் பொட்டிட நீலவர்ணன் ஒத்தன்,
கண்ணுக்கு மையிடக் கணக்குப்பிள்ளை ஒத்தன்,
மத்தியானம் நலங்கிட மகராஜன் ஒத்தன்;
ராத்திரி நலங்கிட ராஜபுத்ரன் ஒத்தன்;
அவன் இழுக்க இவள் சிரிக்க,
அவன்குலுங்க, இவள்மினுக்க,
சொந்தமான ஆம்படையான் சுவர்மூலே நிற்க
அழகான சம்பந்திக்கு அத்தனைபேர் புருஷர்!

## அத்தானுக்கு விருந்து

அக்காளே, அக்காளே,
    அத்தானுக்கு என்ன கறி?
ஊசப் பலாக்கொட்டை,
    ஒய்யார மாங்கொட்டை,
காட்டு மரவட்டை.
    போட்டுக் கொழம்பிட்டேன்.

## காய்கறிப் பாட்டு

அத்தான் அம்மாஞ்சி சம்பந்தம் பண்ணினுங்கோ;
எழுத்தாணி கொண்டு நறுக்கோலே கொண்டு
முகூர்த்தம் வச்சுதாம் மூக்கரட்டை;
பிள்ளையும் பிள்ளையும் நானும் வரேன்னுதாம்
சாட்டைரட்டை;
குட்டியும் பலாவும், நானும் வரேன்னுதாம் குட்டிப்பலா;
முள்ளு மிலாறுமாய் நானும் வரேன்னுதாம் முள்ளுக்கீரை;
தண்டும் தடியுமா நானும் வரேன்னுதாம் தண்டுக்கீரை;
கொத்தும் குலையுமா நானும் வரேன்னுதாம் கொத்தவரை;
சொன்னுன்னுதாம் சுரை; சொல்லலேன்னுதாம் சுண்டை;
குந்தி இருக்கட்டும், குந்தா திருக்கட்டும்;
மயில்போல் இருக்கட்டும; குயில்போல் இருக்கட்டும்;
மஞ்சள் விளையாடி மாதுளம்பூப் பொட்டிட்டுக்
சேப்பு விளையாடிச் சிந்துரப் பொட்டிட்டுக்
கறுப்பு விளையாடிக் கஸ்தூரிப் பொட்டிட்டு
நீலம் விளையாடி நெத்தியிலே பொட்டிட்டு
மணத்தக் காளி வாத்தியார் வந்து,
பொண்ணைக் கொண்டா; புள்ளையைக் கொண்டா;
ஆலை கொண்டா; அட்சதை கொண்டா என்ருரு;
குடுகுடுப் பாண்டி கூச்சல் போடருன்;
கடுகுகதவு மூலையிலே பூந்துண்டு கதவு திறக்கலே;
இலைபோட்டுதாம் இலந்தை; ஜலம்தெளிச்சுதாம்
சின்னிஇலை;
தயிர்ப்பச்சடி எடுத்ததாம் தும்பை;
கறிஎடுத்ததாம் கக்கிரி; அன்னம் எடுத்ததாம் ஆத்தி;
பருப்பு எடுத்ததாம் பெரண்டை; மோர்க்குழம்பு எடுத்ததாம்
மின்னே;
ரசம் எடுத்ததாம் புளிய இலே;
பரமான்னம் வார்த்ததாம் வெண்டை;
உத்தரா போஜனம் வார்த்ததாம் ஊமத்தை;

வெத்தலைபாக்குக் குடுத்ததாம், பச்சைக்கறி வேப்பிலை;
முகூர்த்தத் தன்னிக்கு ஏகாதசி;
முடிவன்னிக்குச் சிவராத்திரி;
அதிலே ஒருநாள் சிரவண துவாதசி;
அதிலே ஒருநாள் கார்த்திகை சோமவாரம்;
அழைச்சா, அழைக்கலேன்ன வேண்டாம்;
சாப்பிட்டா, சாப்பிடலேன்ன வேண்டாம்;
அன்னத்து மேலே அபேக்ஷை இருக்கறவா
அரமனைக்குப் போங்கோ; [அங்கே சாப்பிடலாம்]
தண்ணி மேலே தாகம் இருக்கறவா
தண்ணிப் பந்தலுக்குப் போங்கோ; ததாஸ்து!

## அத்தான் சொன்னது

(1)

அத்தான் வந்தானே, என்ன சொன்னானே?
ஆத்தில் இருக்கற பாகற்காயை அறுக்கச் சொன்னானே;
இலையைப் போட்டுச் சோறு வச்சால் திப்பி இன்னானே;*
அடையைச் சுட்டுக் கையில்குடுத்தால் வறட்டி இன்னானே;
வெண்ணெயைக் காச்சிக் கிண்ணியில் ஊத்தினேன்;
தண்ணி இன்னானே;
புள்ளையைப் பெத்துக் கையில்கொடுத்தால் பொம்மை
இன்னானே!

(2)

['அத்தான் வந்தாங்களா?' என்று கணவனுடைய தங்கையைக் கேட்டதற்கு அவள் கேலியாகச் சொல்வது.]

அத்தான் வந்தாங்க;
அத்தான் வந்தாங்க;

---

(பா-ம்.) * நெய்யை ஊத்திப் பொரிச்சு வச்சேன்;
வாணம் இன்னானே.

ஆத்திலே இருக்கற பாவக் காயை
அறுக்கச் சொன்னுங்க;
பின்னே கொஞ்சம் நெய்யை ஊத்தி
வறுக்கச் சொன்னுங்க;
சின்னக் கிண்ணியில் சோறு போட்டுந்
தின்னச் சொன்னுங்க;
(தோப்பிலே அந்தப்) பாலக்காட்டுப் பாயைப் போட்டுப்
படுக்கச் சொன்னுங்க;
(பத்து மணிக்கு வருவாங்க.)

(★)

அத்தான் வந்தானே;
என்ன சொன்னுனே?
ஆத்தில் இருக்கற பாவக் காயை அறுக்கச்
சொன்னுனே;
எலையைப் போட்டுச் சோறு வ்ச்சால்
திப்பி இன்னுனே;
நெய்யை ஊத்திப் பொரிச்சு வச்சேன்;
வாணும் இன்னுனே;
அடையைச் சுட்டுக் கையில் குடுத்தால்
வறட்டி இன்னுனே;
வெண்ணெயைக் காய்ச்சிக் கிண்ணியில் ஊந்றினேன்;
தண்ணி இன்னுனே;
புள்ளையைப் பெத்துக் கையிலே குடுத்தால்
பொம்மை இன்னுனே!

## அத்தானை ஏசல்

அத்தானே, அத்தானே, வாருங்க;
அமரிக் கையாய் உட்காருங்க;
ஆறு பணம் தாருங்க;
அக்காள் அழகைப் பாருங்க;

உங்கள் கண்ணோ பூனைக்கண்;
உசந்த மூக்கோ கிளிமூக்கு;
பேசும் நாக்கோ பிண்ணாக்கு;
பெருத்த வாயோ ஒருகர்ல்வாய்;
நல்ல வயிறோ வண்ணான்சால்;
நடக்கும் காலோ ஏணிக்கால்;
இந்த அழகுக்கு ஒருவாய்ஏன்?
இடத்தை விட்டு எழுந்துபோ.

## துண்டு துணுக்குகள்

(வெகுதூரம்)

அத்தானே, அத்தானே, கடலோரம், வெகுதூரம்;
காட்டுக்கும் வீட்டுக்கும் வெகுதூரம்;
அத்தானே, அத்தானே!

## அம்மாக்குட்டி கல்யாணம்

அம்மாக்குட்டிக்கு*க் கல்யாணம்;
அவாளவா ளாத்திலே சாப்பாடு;
கொட்டு மோளம் கோவிலிலே;
பாக்கு வெத்தலை கடையிலே;
பூசந்தனம் சாத்தாணி வீட்டிலே;
அம்மாக்குட்டிக்குக் கல்யாணம் நம்மாத்திலே.

## சம்பந்தி ஊஞ்சல்

வளமுடனே கீரைமரக் கொடுங்கை பூட்டி
வளர்புடலங் கொடியதனைச் சங்கிலியாய் மாட்டி
இலைவாழை மரப்பலகை ஊஞ்சல் மீதே
எங்களுட சம்பந்தி ஆடீர் ஊஞ்சல். (1)

---

(பா – ம்.) அம்மாப் பொண்ணுக்குக் கல்யாணம்.

சப்பாணி போல்சம்பந்தி உட்கார்ந் திருக்கச்
சங்குமணி மாலையது கழுத்தில் ஆடத்
திம்மன்போல் சம்பந்தி ஊஞ்சல் ஆடத்
தெருவிலுள்ள ஜனங்களெல்லாம் வந்து கூட,
ஆடீர் ஊஞ்சல். (2)

ஆசையுடன் சம்பந்தி ஊஞ்சலாடும் போது
அழகுடனே கழுதைவந்து கீதம்பாடின போது,
வேடிக்கையாய்ச் சம்பந்தி டோலையாடும் போது
வேங்கடேசக் கவுண்டன் கண்டு மகிழ்ந்தானப் போது. (3)

## சம்பந்தி லாலி

லாலிலா லைய லாலி - சம்பந்திக்கு
அரையிலே கந்தல் லாலி;
காதிலே மொட்டை வாளி - சம்பந்திக்கு
ஊரிலே ரொம்ப ஜோலி;
குஜ்ஜிலிப் பொட்டும் இட்டுச் - சம்பந்தி
கூசாமல் மையும் இட்டு
மெச்சியே தன்னைத்தானே - சம்பந்தி
மயங்குவாள் லாலி லாலி;
மலையாளம் போய் வருவாள்; - சம்பந்தி
மருக்கொழுந்து வாங்கிவருவாள்;
மகிழ்வாகச் சூட்டிக்கொள்வாள்; – சம்பந்தி
மயக்குவாள் லாலி லாலி.

## சம்பந்தி ஏசல்

சம்பந்தி ஆனால் சரியா இருப்பள்.
சரியாய் இருந்தால் சண்டைக்கு நிற்பள்.
எப்படி இருப்பள் எதாப்ரகாரம் சம்பந்தியம்மாள்?
சித்திரை மாசம் சிறுபொண்ணாய் இருப்பாள்.
வைகாசி மாசம் கொட்டைமுத்தாய் இருப்பாள்.

ஆணி மாசம் அழகாய் இருப்பாள்.
கோடை மாசம் குரங்காய் இருப்பாள்.
வாசலிலே ஒருத்தன் வழியோடே போனல்
போயி விழுவாள் பொதியெருது போலே.
கண்டால் புடிச்சால் தடியால் அடிப்பாள்.
காணு தவளாட்டம் ஆத்தாலே வருவாள்.
பேலாத் திருடி; பொருள்மேலே கண்ணு.
எதாப்ரகாரம் சம்பந்தியம்மாள்.
ஆஹா நம்முடைய சம்பந்தி எப்படிப்பட்ட
ரூபத்தோடே இருக்கப்பட்டவள் என்ருல்
நடையிலே நாயாட்டமாய் அழகிலே குரங்காட்டமாய்க்
கழுத்திலே ஒட்டையாட்டமாய் ஸ்வரத்திலே கழுதை
யாட்டமாய்
இருக்கப் பட்டவள்; அறியப் பட்டோம்.
ஆஹா நம்முடைய சம்பந்தி
கார்த்தாலே எழுந்திருந்து ஸ்நானஜபம் தேவைஇல்லே;
இடக்கையிலே எடுத்துக் கொண்டு வலக்கையில்
வாரிக்கொண்டு
நம்முடைய சம்பந்தி சரீரத்தை ரட்சிக்கப் பட்டவள்;
அறியப்பட்டோம்.
ஆஹா நம்முடைய சம்பந்தி எப்பேர்ப்பட்ட
ஏத்தப்பட்ட வஸ்த்ரம் தரிக்கப்பட்டவு ளுன்னு
மூலெயிலே முடுக்கிலே இருந்ததுண் டானல்
பிடித்துணி, இடித்துணி, பிடித்துக்கொண்டா ருல்
தரிக்கப்பட்டவள்; அறியப் பட்டோம்.
தட்டார வீதியிலே தடிபோல வந்தாள்.
தாயாரும் பொண்ணும் பொகுசிரேஷ்ட மானுள்.
ஓலக்கி என்று ஒருகிராமம் என்று
பொண்ணேக் கேளாமலே பொண்ணேக் குடுத்தோமே!
முழிக்கிருங்களே, முழியாந்தகா,
எடுக்கிருங்களே அவிசாரி மக்கள்.
அகாராந்தப் புல்லிங்கஹ, ஆட்டுக்குட்டி ஸப்தஹ,

நகாராந்தப் புல்லிங்கஹ, நாய்க்குட்டி ஸப்தஹ,
கொகாராந்தப் புல்லிங்கஹ, குரங்குக்குட்டி ஸப்தஹ
ஸப்தசாஸ்திரம் படிச்ச சம்பந்தி
கோமணத்தைத் திருடினுள்........

## மாமியார் மருமகள் உரையாடல்

சீப்பு வந்து சிக்கில் இருக்குது வாடி மருமகளே,
சீப்பு வந்தால் எனக்கென்ன? - அது
சிக்கில் இருந்தால் எனக்கென்ன?
கட்டுக் கயிறுவந்து கொடியில் இருக்குது; வாடி
மருமகளே,
கட்டுக் கயிறுவந்தால் எனக்கென்ன? – அது
கொடியில் இருந்தால் எனக்கென்ன?
மாலை வந்து மடியில் இருக்குது; வாடி மருமகளே!
மாலை வந்தால் எனக்கென்ன - அது
மடியில் இருந்தால் எனக்கென்ன?
கூறை வந்து கொடியில் இருக்குது; வாடி மருமகளே!
கூறை வந்தால் எனக்கென்ன? – அது
கொடியில் இருந்தால் எனக்கென்ன?
தாலி வந்து தரையில இருக்குது; வாடி மருமகளே!
தாலி வந்தால் எனக்கென்ன? – அது
தரையில் இருந்தால் எனக்கென்ன?
பாப்பான் வந்து பஞ்சாங்கம் சொல்கிறுன்; வாடி
மருமகளே!
பார்ப்பான் வந்தால் எனக்கென்ன? – அவன்
பஞ்சாங்கம் சொன்னுல் எனக்கென்ன?
மாப்பிள்ளை வந்து மணைமேல் இருக்கிறுன்; வாடி
மருமகளே!
மாப்பிள்ளை வந்தால் எனக்கென்ன? – அவன்
மணையில் இருந்தால் எனக்கென்ன?

## மாமியார் மருமகளை அழைத்தல்

ஒருகரண்டிப் பொன்னுத் தாரேன், வாயேன் மருமகளே,
ஒருகரண்டிப் பொன்குடுத்தால் ஆத்துவனோ, தூத்துவனோ?
அலைகடலும் பத்தாது;
சின்னண்ணன் காலுக்குச் சிலம்படிக்கப் பத்தாது;
பெரியண்ணன் கைக்குப் பெரம்படிக்கப் பத்தாது;
கூடத்தெங் கக்காளுக்குக் கொப்புச்செய்யப் பத்தாது;
மாடத்தெங் கக்காளுக்கு மணிசெய்யப் பத்தாது;
குப்பையிலே மேய்கிறசில கோழிக்கும் பத்தாது;
மந்தையிலே மேய்கிறசில மாட்டுக்கும் பத்தாது;
பத்தாக் குறைச்சலுக்குப் * படியளக்கப் பத்தாது.

## மாமியாள் வராள்

செம்பகமே, சிறுசுளகே,
மாமியா வரா;
மஞ்சத் தண்ணி கொண்டுவரா
ஓடிப்போ, ஓடிப்போ!

## பெண் இல்லை

ஒத்தச் செருப்பாலே வந்தோம் நாங்க;
ஓரடி வில்லாலே வந்தோம் நாங்க;
மாஞ் சுருளாலே வந்தோம் நாங்க;
மல்லிப்பூச் செண்டாலே வந்தோம் நாங்க;
பேர் இட்ட மாமியார் வந்தோம் நாங்க;
பெண்ணுக்கு நாத்தனார் வந்தோம் நாங்க;
பொண்ணில்லே – தங்கம் – பொண் இல்லே;
ரெட்டைச் செருப்பாலே வந்தோம் நாங்க;
ரெண்டடி வில்லாலே வந்தோம் நாங்க;
[இப்படியே தொடர்ந்து வரும். விளையாட்டுக் கல்யாணத்துக்கு முன்னே இதைப் பாடுவார்கள்.)

---

(பா-ம்) பறையனுக்கு.

## மணப்பெண்ணுக்கு நகை

பிள்ளைவீட்டார்;

ஐந்நூறு ரூபாய் பெறுமான ஜடைநாகம்,
அதுக்கேத்த சூரியப்பிறை சந்திரப்பிறை
இருந்தால் போதும்;
காதுக் கேத்த வைரம் இழைச்ச கம்மல் வேணும்;
அதுக்கேத்த வைரமாட்டல் இருந்தால் போதும்;
கழுத்துக் கேத்த ஐந்நூறுரூபாய் பெறுமான அட்டிகை;
அதுக்கேத்த காசுமாலை கெச்சைகளும் இருந்தால்
போதும்;
இடுப்புக் கேத்த ஒட்டியாணம் இருந்தால் போதும;
அதுக்கேத்த சாவிமடல் இருந்தால் போதும்;
கைக்குஏத்த காப்பு இருந்தால் போதும்;
அதுக்கேத்த ஐந்நூறுரூபாய் பெறுமான மோதிரம்
இருந்தால் போதும்;
காலுக் கேத்த காப்புக் கொலுசு இருந்தால் போதும்;
அதுக்கேத்த வெங்காயப் பீலி இருந்தால் போதும்;

[இவை எல்லாம் போடுவதற்குப் பிள்ளை வீட்டார் இணங்க வேண்டும். மற்ற நகைகளைப் பெண் வீட்டார் போட வேண்டும்.]

## கல்யாணத்துக்கு வேண்டியவை

ஐங்கரனுர் க்ருபையாலே அம்பிகைஅரு ளாலே
ஆறுமுகன் தயவாலே அடிபணிஞ்சு பாடப்
பார்புகழும் கும்பகோணம் பிரபலமான ஊரில்
மங்களாம்பாள் பேரில் மகத்துவம் ஆகக்
கலியாணக் கும்மிதனைக் [களிப்புடனே] பாட
எந்தெந்த ஊரிலுள்ள ஜனங்களெல்லாம் கூடி
பையன்களைத் தேடிப் பரிவுடனே நாடிப்
பையன் முன்னுக்கு வருவானென்று [எண்ணி]ப்

படிக்க வச்சார் நாடி.
ஆல்ரைட் மெட்றிகுலேஷன், அப்பரீட்சையும் தேறி
எப்.ஏ.,பி.ஏ.,எம்.ஏ., எல்.டி. முதல்தேறி.

**பெண்வீட்டார்:**

எப்.ஏ.,பி.ஏ., ஆனால் என்ன?
எல்.டி. கொடுத்தால் என்ன?
இங்கிலாந்து போய்விடுவான் – அடியம்மா*
அந்தப் பிள்ளை நமக்கு வேண்டாம்.
நல்லது பொல்லாது இல்லை;
ஞாயித்துக் கெழமை லீவும் இல்லை;
நாசூக்கு இல்லவே இல்லை; – அடியம்மா
ரெயில்வேலைப் பிள்ளை வேண்டாம்.
சங்கிலி புடிச்சுக் கொண்டு
சந்து பொந்து அளந்து கொண்டு
சாக்கடையில் விழுந்து கொண்டு – அதனாலே
சர்வேப் பிள்ளை நமக்கு வேண்டாம்.
கணக்கு மூட்டை கட்டிக் கொண்டு
கலெக்டர்பின்னே ஓடிக் கொண்டு
காடு மோடு சுத்திக் கொண்டு – அடிஅம்மா
கர்ணம் வேலைப் பிள்ளை வேண்டாம்.
வக்கீல் பிள்ளை ஆனாலும்
வைப்பாட்டி வச்சுக் கொள்வான்;
வாழாமல் வைப்பானடி; – அடியம்மா,
வம்புதும்பு ரொம்ப உண்டு; – அதனாலே
அந்தப் பிள்ளை நமக்கு வேண்டாம்.
முன்சீப்தார் பிள்ளை என்றால்
முகலட்சணம் இல்லையாம்;
மூர்க்கங்கள் செய்வாண்டி; – அடியம்மா,
முன்னாலே சொல்லி விட்டேன்.
ஹைகோர்ட்டு ஜட்ஜியாம்; – அவருக்கு

(பா–ம்) * அதனாலே.

அருமையாய் ரெண்டு பிள்ளை;
அதில் ஒரு பிள்ளை; அவரை
அண்ணாவைக் கேட்கச் சொல்லு.

## சொன்ன குறி

வாசல் பக்கத்துப் பல்லி இப்போ
வரார்வரார் எங்குது;
கொல்லைப் பக்கத்துப் பல்லி இப்போ
குட்டுக்குட்டுச் சொல்லுது;
குடுகுடுப் பாண்டி இப்போ
கூடும் கல்யாணம் என்கிறான்;
அடிஓசை படுகிறது;
அண்ணா வராரோ? பாரடி.
ஜோட்டுச் சத்தம் கேட்குதடி;
சொன்னகுறி சரியடி.

அப்பா சொல்வது:

ஊருக்குள்ளேகும்ப கோணத்திலே
ஊகித்துப் பாத்தேண்டி; பொண்மயிலே,
பேரில் பெருத்த பெரியகா லேஜியில்
பெருமைகள் பெத்த நேடிவ் ஸ்கூல்;
ஊரில் பெருத்த காலேஜில்
உண்ணாமல் எண்ணாமல் கண்ணாலே பார்த்துட்டேன்.
(ஊருக்குள்ளே)

வெள்ளிப் பிரம்பாம்; விளையாடப் பந்தாம்;
வேடிக்கை யாகவே பெட்டர்க் குளோபராம்;
துள்ளி விளையாடப் புள்ளிமான் குட்டியாம்;
நிலைக்கண்ணாடி, உன்னுடைய
மன்னன் அடி கேட்கிறான். (ஊருக்குள்ளே)

தங்கப் பொத்தான்; தலைக்குட்டையாம்;
சாஞ்சு படுக்க ஈஸி சேராம்;
தப்பாமல்தினம் வாக்கிங் போகச்
சாரட் வண்டி, குதிரைகள் வேணுமாம் (ஊருக்குள்ளே)

பிள்ளை வீட்டார்:

வக்கீல் பொண் வேண்டாம்; - அது ரொம்ப
வாயாடி யாய் இருக்கும்.
வியாஜியம் பேசி வழக்குக் கிழுத்திடும்;
வாழாமல் இருந்திடும்!
தாசீல்தார் பொண்வேண்டாம்; - அது ரொம்பத்
தாமச வேலை செய்யும்;
தத்துப் பித்து என்றால் அதைத்
தாங்குவது யாரடியோ?
முன்சீப் பொண்வேண்டாம் - அதுரொம்ப
முகலட்சணம் இல்லையாம்;
மூலைக்கு மூலை முணுமுணுக்கும் என்று
முன்னடி சொல்லிவிட்டேன்.
இன்ஸ்பெக்டர் பொண்வேண்டாம்; - அதுரொம்ப
இழுப்பு வியாதிகளாம்.
கிறுமுறு கிறுமுறு என்றால் அதன்
கிட்டயார் போவார்?
பஞ்சாங்கக்காரர் பொண்வேண்டாம் - அதுரொம்பப்
பட்டைச் சோறு கேட்கும்.
கொட்டு மோளம் கொட்டினால் - அதற்குக்
கோயில் நினைவு வரும்.
கலெக்டர் பொண் ஆனாலும் - அதுதான்
காலையில் எழுந்தவுடன் காபீட என்பாளடி; - அதனாலே
அந்தப்பொண் நமக்கு வேண்டாம்;
ஹைகோர்ட்டு ஜட்ஜியாம் - அவருக்கு
அருமையாய் ரெண்டு பொண்ணும்.

அதில்ஒரு பொண்ணை நம்ம
அண்ணாவைப் பார்க்கச் சொல்லு.
அழகான மாப்பிள்ளைக்கு அத்தையும் பாட்டியும் கூடிப்
பணம் வாங்க எண்ணிப் [பயமில்லாமல் அந்தச்]
சபைதனிலே வந்தாளே அங்கமெலாம் கூனி.
சீர்என்ன செய்யப் போறீர்? சீக்கிரமாய்ச் சொல்லும்;
பணங்காசு சொல்லும்; [பட்டாடை சொல்லும்.]
கேட்டபோது தவக்கமில்லாமல் கோட்டைப்பவுனைக்
குடுக்கணும்.
அப்பவரச் செலவுக்கெல்லாம் ஐஞ்சுடவுன் குடுக்கணும்.
ஆறும் மாசம் தீபாவளிக்கு
அரைஞாண் பண்ணிப் போடணும்.
வருஷாந்தரச் சீருக்கெல்லாம் வகைவகையாய்ச்
செய்யணும்.
வெள்ளிப் பாத்திரம், பித்தளைப் பாத்திரம்,
வேணதெல்லாம் வாங்கணும்.
கும்பகோணம் வெள்ளிப் பாத்திரம்
கூடப் போயி வாங்கணும்.
பைங்கா நாட்டுப் பித்தளைப் பாத்திரம்
பார்த்து நன்னா வாங்கணும்.
நாச்சியார் கோவில் வெங்கலப் பாத்திரம்
நாகரிகமாய் வாங்கணும்.
அண்டா, குண்டா, சருவங்களும்
அழகாகவே வாங்கணும்.

## அகமுடையான் வந்தால்?

அம்மாப் பொண்ணே, தும்பைப் பூவே;
ஆம்படையான் வந்தால் என்ன செய்வே?
கட்டி வெல்லத்தைப் புட்டு வைப்பேன்;
கறந்த பாலைக் காய்ச்சி வைப்பேன்;

உண்ண உண்ணச் சோறிடுவேன்;
ஊருக்குப் போனால் வழிவிடுவேன்;
திரும்பி வந்தால் செருப்பால் அடிப்பேன்.

## அம்மாக்குட்டி கல்யாணம்

அம்மாக் குட்டிக்குக் கல்யாணம்;
அவாளவாள் ஆத்துலே சாப்பாடு;
கொட்டு மேளம் கோயிலிலே;
பாக்கு வெத்தலை கடையிலே;
பூசந்தனம் சாத்தாணி வீட்டிலே;
அம்மாக் குட்டிக்குக் கல்யாணம், நம்மாத்திலே.

## மணமகளை ஏசல்

கோவைப் பழம்போலே எங்கபொண்ணு அழகு,
    எங்க பொண்ணு அழகு;
கொடுவாள் மூஞ்சி மாப்பிள்ளைக்கு நலங்கிட வாரும்;
நாவற்பழம் போலே எங்கபொண்ணு அழகு,
    எங்கபொண்ணு அழகு;
நாய்மூஞ்சி மாப்பிள்ளைக்கு நலங்கிட வாரும்;
அன்னாசிப் பழம்போலே எங்கபொண்ணு அழகு,
    எங்கபொண்ணு அழகு; - இந்த
அழகுகெட்ட மாப்பிள்ளைக்கு நலங்கிட வாரும்;
எலுமிச்சம் பழம்போலே எங்கபொண்ணு அழகு;
    எங்கபொண்ணு அழகு; – இந்த
எரிமூஞ்சி மாப்பிள்ளைக்கு நலங்கிட வாரும்,

## வைப்பாட்டி

வள்ளக் கிலுகிலுப்பை, வாகான முள்ளு வாங்கி
வச்சு மறந்தானும் வைப்பாட்டி வீட்டினிலே;

எதிராள் வீட்டிலே சதுரான பொண்இருக்க
நல்ல அழகியின்னு மச்சேறிக் குதிச்சானும்;
கிரீச்சு மிதியடியாம்; கீப்பாச்சிச் சல்லடமாம்;
அதுக்கி நடந்தாராம், அந்தச் சிறுக்கி தலைவாசல்,

## மாவளி சுற்றல்

[கார்த்திகை மாதத்தில் வாணம் சுற்றும் போது பையன்கள் பாடிச் சுற்றுதல்.]

மாவளியோ மாவளி
மாவளிக் காரன் பொண்டாட்டி
மரக்கால் புள்ளை பெத்தாளாம்;
எடுக்க வந்த சீமர்ட்டி
இடுப்பொ டிஞ்சு செத்தாளாம்;
பார்க்க வந்த சீமாட்டி
பல்ஒ டிஞ்சு செத்தாளாம்;
கேட்க வந்த சீமாட்டி
கீழே விழுந்து செத்தாளாம்;
தூக்க வந்த சீமாட்டி
சுருண்டு விழுந்து செத்தாளாம்.

## பொட்டச்சி பிள்ளை

பொட்டச்சி மூன்றுபுள்ளை பெத்தாளாம்;
ஒண்ணை ஆட விட்டாளாம்;
ஒண்ணைப் பாட விட்டாளாம்;
ஒண்ணைக் கருவாட்டுக் கடையிலே பொறுக்க
விட்டாளாம்,

## பலிஞ்சடுகுடு

குன்னத் தூரு மெத்தை மேலே

கொள்ளுக்காய் பறிக்கப் போனேன்;
வள்ளுவத் துலுக்கப் பையன் வளைச்சுக்கிட்டான்;
திமிறிக் கொண்டேன்; புடிச்சுக்கிட்டான்.
நான் – திமிறிக்கொண்டேன்.
நான் – திமிறிக் கொண்டேன்.

## சுண்ணும்புப் பாட்டு

நான் இடிக்கும் – ஏலேலோ – நல்சுண்ணும்பு
நல்ல மெத்தை - ஏலேலோ கட்டலாமே;
பொன்இ டிக்கும் – ஏலேலோ – புதுச் சுண்ணும்பு
பெரிய மெத்தை - ஏலேலோ – கட்டலாமே;
தங்க நல்ல - ஏலேலோ - துடைப்பம் கொண்டு,
துடையுங்கடி - ஏலேலோ – கோபுரத்தை.
வெள்ளி நல்ல - ஏலேலோ - துடைப்பம் கொண்டு
விளக்குங் கடி – ஏலேலோ - கோபுரத்தை.



வஞ்சி நல்ல - ஏலேலோ - கடுதாசி,
வளவனூரு - ஏலேலோ - மிட்டாயி,
வாங்கிவர ஏலேலோ - பொண்இருக்க
வாயடைக்கிற – ஏலேலோ – மாயம்என்ன?
பொன்னு நல்ல ஏலேலோ - கிடக்குதுன்னு
பூமியிலும் - ஏலேலோ - குனிய மாட்டேன்;
புத்திகெட்ட - ஏலேலோ - பையனுலே,
பூமியிலே – ஏலேலோ - குனிஞ்சேன் நானே;
தங்கம்நல்லா – ஏலேலோ – கெடக்குதுன்னு
தரையிலுமே - ஏலேலோ - குனியமாட்டேன்;
சாடுமாறி - ஏலேலோ – பையனுலே,
தரையிலுமே – ஏலேலோ - குனியலாச்சே!



சாயம் நல்ல – ஏலேலோ - புடைவைக்காரி
சன்னல் வச்ச - ஏலேலோ – கொப்புக்காரி
என்னை நல்லா – ஏலேலோ – பகட்டாதடி;
என்கை யிலும் – ஏலேலோ - ஒண்ணும்இல்லே;
ஆரை யுந்தான் – ஏலேலோ – கேட்கவில்லே;
அவிசாரிதான் – ஏலேலோ – போகவில்லே;
கைப்பாடுதான் - ஏலேலோ – பட்டல்லவோ
கட்டுறேண்டா - ஏலேலோ – சாயச்சேலே?
சன்னுசிதான் – ஏலேலோ – உருவம்கொண்டு
சாகிருண்டி – ஏலேலோ – உன்கணவன்;
அறுப்பறுத்த – ஏலேலோ – மோதிரமாம்,
திருப்பாப்பூர் – ஏலேலோ – கோபுரமாம்.

ஆளன்கீழே – ஏலேலோ – பொண்சாதியைக்
கோவில் நல்ல – ஏலேலோ - படிஏறிக்
கொண்டுவந்தேன் – ஏலேலோ-மாமியத்தை,
கோட்டைநல்லா – ஏலேலோ – புடுக்குமத்தை,
கூடமைச்சு - ஏலேலோ - வாழுறேனே;
வாசல்நல்ல – ஏலேலோ - படிஏறி
வரவழைச்சேன் - ஏலேலோ - மாமியத்தை;
காசுமாலே - ஏலேலோ - மின்னுதத்தை,
காறிமூஞ்ச - ஏலேலோ - கட்டைக்குத்தான்;
கதைஎங்கே - ஏலேலோ – பாடப்போறேன்?
மோடுநல்லா - ஏலேலோ - துளுக்குதத்தை
முன்சரடு – ஏலேலோ – மின்னுதத்தை.

## தெம்மாங்கு

கந்தல் துணிபெருக்கிக் கருவாட்டு வால்பெருக்கித்
தூங்கத் துணிபெருக்கித் தூக்கிப்பாடு தெம்மாங்கு.

சுண்டெலி மூஞ்சிபோடா, சுடுகாட்டு வெள்ளெலும்பே,
அண்டை வீட்டு மணிகாலி; அடக்கிப்பாடு தெம்மாங்கு.
அஞ்சு படிவடிக்கும் கஞ்சிகிளறும் குண்டுசட்டி;
ஈயம்பூசிக் செட்டிபோடா, என்கூடவா பாடப்போறே?
ஆரஞ்சுத் தோல்பெருக்கி * ஆறுலட்சம் தேருகட்டித்
தேருக்கு மேலிருந்து தேவரெல்லாம் பாக்கருங்க.
நத்தினேண்டி உன்னேநானும்; நாலாறு மாசமாக;
நத்தினுலும் குத்தமில்லே; நான்உனக்கு முறையும்இல்லே;
கூடார வண்டிகட்டிக் குயிலாளைக் குந்தவச்சுத்
தட்டிஓட்டும் வண்டிக்காரா, சத்திரந்தான் படுக்குமிடம்.

## நான் வரவில்லே

கையிலே காப்பும் இல்லே, காதிலே கடுக்கன் இல்லே;
நான்வல்லே திருநாளைக்கு.

## ராமக்கா

அடிபொண்ணே ராமக்கா,
பையன் வாரான் பாத்துக்கோ;
துட்டுத் தருவான் வாங்கிக்கோ;
சுருக்குப் பையிலே போட்டுக்கோ;
தட்டான் கையிலே குடுத்துக்கோ;
தாலி பண்ணிக் கட்டிக்கோ.

## ராமாயிக்கு

அடிஅடி ராமாயி: அரிசிக் காரன் வாராண்டி;

---

(பா-ம்.) * பொறுக்கி,

சின்ன வீடு கட்டிக்கோ; சிலுக்குத் தாப்பாள் போட்டுக்கோ;
கெட்டி மஞ்சளைப் பூசிக்கோ; கெழவ னோடே பேசிக்கோ;
அடியேஅடியேராமாயி [பையில்பணத்தை]ப்போட்டுக்கோ;
லட்டுமிட்டாய் வாங்கிக்கோ; லக்க மிட்டுப் பாத்துக்கோ;
கொஞ்சம் கொஞ்சமாய் எடுத்துக்கோ; கூசாமலே
தின்னுக்கோ;
ரெயில்மேலே ஏறிக்கோ; ரகசியமாய்ப் போயிக்கோ.

## பெண்களுக்கு அறிவுரை

ஏலேலோ ஏலேலோ – உத்தமியே
ஏலேலோ ஏலேலோ!
சீரான பெண்ணரசே, சிறந்த ஒரு புருஷனுக்கே
ஆராய்ந்து உனைப்பெற்றோர் அழகாக மணம்பேசி,
பந்துஜனங் களுக்கெல்லாம் பரிவாகச் சொல்லிப்
பாங்காகக் கல்யாணப் பந்தல்அலங் கரித்து
வாழை கமுகுகள் வரிசையாய் நாட்டி
வாத்தியம் கல்லென்று மாண்பாய் ஒலிக்க
நலமுற்ற வேளையில் நாற்புறமும் சூழ்ந்து
பொலிவுள்ள மாதர்கள் நலங்கிட்டு முடிக்கத்
தக்கஉத கத்தாலே ஸ்நானம்செய் வித்து
சாந்தபரி மளப்பொடிகள் துலங்கமெய் பூசிச்
சரிமலர்க் குழலுக்குத் தூபங்கள் காட்டிச்
சொர்ணபூ ஷணங்கள்பல துலங்க அலங்கரித்து
மாதர்கள் பலர்சூழ்ந்து மங்களம் பாட
வேதியர்கள் பல்லாண்டு விளம்பிமகிழ் கூர
அக்கினி அருந்ததி இவர்சாட்சி யாக
அருகாக நின்றுதத் தஞ்செய் தளிக்கத்
தாலி கட்டிய கணவனே தெய்வமாகத்
தவறாமல் அவன்சொல்லும் வழிநிற்க வேணும்.
மாமியார் நாத்திகளை மகிழ்விக்க வேணும்;

மாறுசொல் லாமல்அவர் சொல்கேட்க வேணும்;
கணவனுர் கோபிக்க ஒன்றும்சொல் லாதே;
காட்டேரி போலவன் முன்னேநில் லாதே;
ஒன்றுக்குப் பலசொற்கள் பேசிஎதிர்க் காதே;
ஒட்டாரஞ் செய்துபாய் போட்டுப்படுக் காதே;
ஆத்திரம் கொண்டுஒரு அடிஉன்னை அடித்தால்
அடியென்று மடியிற்கை பிடித்திழுக் காதே;
இல்லாத பொருள்களுக் கிச்சைவைக் காதே;
எந்நேர மும்செல்லைப். போலரிக் காதே;
வீட்டுச்சங் கதிகளை வெளியில்சொல் லாதே.
வெட்கங் கெடப்பிறர் நகைக்கவை யாதே;
பாழான கோபத்துக் கிடங்கொடுக் காதே;
பத்ரகா ளியைப்போலத் தலைவிரிக் காதே;
வரவுக்கு மேலிட்ட செலவுசெய் யாதே;
வாழ்நாள்எல் லாந்துக்கப் படவைத்தி டாதே;
இதமான வார்த்தையே பேசிவர வேணும்;
இஷ்டப தார்த்தங்கள் சமைத்துவைக்க வேணும்;
கூன்குரு டானுலும் குறைபேசி டாதே;
குலம்கெட்ட போதிலும் குற்றம்வை யாதே;
அன்னிய புருஷர்மேல் ஆசைவை யாதே;
அதனுல் அவமானம் அடக்கமுடி யாதே;
காசுக் கழித்திட்ட கற்புக்கோ டிப்பொன்
கணக்காகக் கொடுத்தாலும் மீளவ ராதே;
அயல்வீட்டுக் கடிக்கடி போகநினை யாதே;
அலட்சிய மாய்ப்பேச உடல்எடுக் காதே;
மேனி மினுக்கிஒளி வாய்நட வாதே;
வேறு புருஷர்இச்சை கொள்ளத்திரி யாதே;
இவ்வாறு நடந்திடின் குடும்பவிஷ யங்கள்
எந்நாளும் குறையாமல் ஈடேற நல்ல
புத்திரப் பேறுடன் போகபாக் கியங்கள்
பொற்பூ ஷணங்களும் புகழுடன் பெறுவாய்;

தேர்ந்து - துயர் தீர்ந்து – அருள்
கூர்ந்து – மிக ஓர்ந்து
ஏலேலோ ஏலேலோ!

## தலை பார்க்க நேரம் இல்லை

பூவரசம் போத்து வெட்டிப்
பொன்னாலே ரோட்டுப் போட்டுக்
தங்கக் கொழுந்தனுக்குத் தலைபார்க்க நேரம் இல்லை.

## தம்பி

ஆடவரோடு போவட்டும், அவரைக்காய் காய்க்கட்டும்,
தம்பி பொறக்கட்டும்; தடியாலே அடிக்கட்டும்,

